# விளங்கும் விளக்குகள்!

ஒளிபரப்பும் விளக்கில் கலையையும் ஒளிரச் செய்ததில் தமிழனுக்கு நிகராக இன்னொருவனை உலகிலெங்குதேடினாலும் கிடைக்க மாட்டான். பாவை விளக்கு, அகல் விளக்கு, குத்துவிளக்கு, அன்ன விளக்கு, சரவிளக்கு என்று எத்தனை எத்தனை ரகம்! ஒவ்வொரு ரகத்திலும் எத்தனை விதம் விதமான கற்பனைகள்! கலை நுணுக்கங்கள்!

சென்னை சி. பி. ராமசாமி கலைக் கூடத்தில் ஒரு முறை விளக்குகள் கண்காட்சி நடந்தது. அதைப் பார்வையிட வந்திருந்த கலை ஆர்வமுள்ள ஒரு பெண்மணியைக் குத்து விளக்குகளிடையே சுடர் விளக்காய்ப் படமெடுத்தார் **உத்ரா**.

இந்த வண்ணப்படத்தைப் பார்த்தவுடன், குத்துவிளக்குகள் தயாரிப்பு பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டுக் காதி கிராமோத்யோக் பவன் சென்றேன். அங்கே விளக்குகள் விற்பனைப் பகுதியில் சிறப்புப் பணியாற்றுபவரான குமாரி **புஷ்பா** சொன்னார்:

நாகர்கோயில், காஞ்சிபுரம், திருநெல்வேலி, ஆகிய ஊர்களில் விளக்குகள் தயாரிக்கும் யூனிட்டுகள் உள்ளன. ஒவ்வொரு யூனிட்டிலும் இந்த விளக்குத் தொழிலை நம்பி சுமார் நூறு குடும்பங்கள் இருக்கின்றன. இந்தக் கலையைக் காப்பாற்றும் நோக்கில் இந்த யூனிட்டுகளை அரசு நடத்துகிறது.

இவை தவிர தனிப்பட்ட முறையில் விளக்குகள் தயாரிப்போரும் பலர் உண்டு. அந்த விளக்குகளும் இங்கு விற்பனைக்கு வருகின்றன.

சரவிளக்குகளில் மட்டும் பத்துப் பன்னிரண்டு வகைகள் உள்ளன. அடுக்கு விளக்கு, தொங்கு விளக்கு, கிளை விளக்கு, தூங்கா விளக்கு என்றிப்படிப் பலப்பல.

யூனிட்டுகள் தயாரிக்கும் விளக்குகளை விற்க வடிகால் வேண்டுமல்லவா? இவை காதி கிராமோத்யோக் பவன் தவிர, காதி கிராஃப்ட், பூம்புகார் முதலிய விற்பனை நிலையங்களுக்குச் செல்கின்றன. இதனால் கைவினைஞர்கள் விற்பனை பற்றிய கவலையின்றி கலையிலேயே கருத்துச் செலுத்த முடிகிறது.

இந்தத் தொழிலில் பிரச்னை, சமயத்தில் கச்சாப் பொருட்கள் கிடைக்காததுதான். வெண்கலம், பித்தளை தவிர வேறு முக்கியமான ஒரு பொருளும் விளக்குத் தயாரிப்பில் தேவைப்படுகிறது: துப்பாக்கித் தோட்டாக்கள்! பயந்துவிடாதீர்கள். சுடப்பட்ட வெத்துத் தோட்டாக்கள்தாம்!

விலை? ரூ. 35 முதல் 3500 வரை கொடுத்துப் பல ரகங்களில், பல வடிவங்களில் வாங்கலாம்.

விளக்குகள் மிக அதிகமாக விற்பனையாகும் ஊர் இந்தியாவிலேயேசென்னைதான்! காதி கிராமோத்யோக் பவன் மட்டுமே ஆண்டொன்றுக்கு ரூ. 30000க்கு விற்கிறது. ஏராளமாக ஏற்றுமதியாகவும் தொடங்கி இருக்கிறது.

ஹரே கிருஷ்ணா இயக்கம் பரவினாலும் பரவிற்று, விளக்குகளுக்கு மேல் நாடுகளில் ஏக கிராக்கி!

பேட்டி: **சித்தி**

# மின் விசைச் சாலைகள்!

அமெரிக்காவில் (யு.எஸ்.) – அமைதி தவழும் நகரம், ஸான்ட்டா பார்பரா. 'ஸ்டேட் ஸ்ட்ரீட்' அதன் ராஜ பாட்டை. இதனை மின் வீதியாக்கப் போகிறார்கள். ஆம், இரு ஆண்டுகளில் பேருந்துகள் இந்த வீதிகளில் மின் காந்த விசையால் ஓடும்.

இதில் ஒரு புதுமை என்னவென்றால், பேருந்துகளுக்குத் தேவைப்படும் மின் காந்த விசை தெருவிலிருந்து கிடைக்கும் என்பதுதான். சாலையில் சில அங்குலங்களுக்குக் கீழே மின்விசைக் கேபிள்கள் பதிக்கப் பட்டிருக்கும். இந்த மின் விசைச் சாலையில் பேருந்து ஒரு மைல் ஓடினால், அதிலுள்ள மின் கலன்கள் விசை ஏற்றம் பெற்று, அது மின்விசை இல்லாத வேறு தெருவில் ஒரு மைல் ஓடுமாம்!

புதியமுறைக்கு ஆங்கிலத்தில் Induction Coupling என்று சொல்கிறார்கள்.



# கிருஷ்ணா வரப்போகிற வழியில் வந்த போது...

SRISAILAM DAM
KRISHNA RIVER
MYLAVARAM DAM
SOMASILA DAM
CUDDAPAH
NELLORE
BAY OF BENGAL
MADRAS
TAMIL NADU
NEW AREA TO BE IRRIGATED

பிரும்மாண்டமான 'தெலுங்கு கங்கை' திட்டம் ஆந்திரப் பிரதேசத்தில் கிருஷ்ணாவின் மீது கட்டப்பட்டுள்ள ஸ்ரீ சைலம் அணையிலிருந்து தொடங்கி சென்னை பூண்டி ஏரியில் முடிவடைகிறது. கிருஷ்ணாநதி தண்ணீர் வரப்போகிற வழியில் நமது நிருபர் வந்தபோது:

**முக்கிய இடங்கள்:**

ஸ்ரீசைலம்: கிருஷ்ணாவின் குறுக்கே கட்டப்பட்டுள்ள முக்கிய அணை இங்குதான். இந்த அணைக்குப் பக்கத்தில் உள்ள போத்தி

✖ 'வெலுகோடு'வில் எம். ஜி. ஆருக்கு வரவேற்பு

✖ சோமசிலா அணைப்பகுதி-சென்னைக்கு இங்கிருந்து நீர் திருப்பப்படுகிறது.

ரெட்டிப்பாடு என்ற இடத்தில் ஒரு தலைமதகு கட்டத் திட்டம் உள்ளது. அணையையும் தலை மதகையும் சுமார் 3.5 கி. மீ. நீள கால்வாய் இணைக்கும். இது சம்பந்தமான பணிகள் இன்னும் எதுவும் ஆரம்பமாக வில்லை.

✖ பெண்ணாறு மேம்பாலத்தில் தெலுங்கு கங்கைக்கு வரவேற்பு



❋ ஸ்ரீனிவாசலு ரெட்டி,
ஆந்திர நீர்ப்பாசன அமைச்சர்

வெலுகோடு: 'பொத்தி ரெட்டி பாடு' தலை மதகிலிருந்து வெட்டப்படும் கால்வாய். பனகசர்லா என்ற இடத்தில் உள்ள ரெகுலேட்டர் வழியே 'வெலுகோடு' என்ற இடத்துக்கு வந்து சேரும். இங்கு ஒரு நீர்த்தேக்கம் கட்ட ஆந்திர முதல்வர் என். டி. ஆர். தமிழக முதல்வர் முன்னிலையில் அடிக்கல் நாட்டியிருக்கிறார்.

பிரம்மச்சாரி மடம்: இங்கே இன்னொரு நீர்த் தேக்கம் கட்டப்பட இருக்கிறது. அடிக்கல் நாட்டியவர் எம். ஜி. ஆர்., என். டி. ஆர். முன்னிலையில்.

சென்னமுக்கப்பள்ளி: இங்கே ஒரு ரெகுலேட்டர் கட்டப்பட இருக்கிறது. இந்த ரெகுலேட்டரிலிருந்து, பெண்ணாறு வரை தனிக் கால்வாய் வெட்டப்பட இருக்கிறது. ஜுலை முதல் அக்டோபர் வரை கால்வாயில் நீர் வரும்.

சோம்சிலா: பெண்ணாற்றின் குறுக்கே கட்டப்பட்டு வரும் சோமசிலா அணையின் வேலைகளே மிக மெதுவாகத்தான் நடைபெறுகின்றன. அரசு புதிய தெலுங்கு கங்



◐ பிரம்மசாரி மடம்-இங்கே ஒரு நீர்த்தேக்கம் அமையும்

◐ பூண்டி நீர்த்தேக்கம்—இன்றைய நிலை

## வீராணம் திட்டம் தோல்வி கண்டதேன்?

வீராணம் ஏரியிலிருந்து சென்னை நகருக்குக் குழாய் மூலம் தினசரி 2.5 மில்லியன் காலன் தண்ணீர் கொண்டுவரத் திட்டப்பட்ட திட்டம் சம்பந்தப்பட்ட பணிகள் 1975 மத்தியில் நின்று போயின. 75ல் சென்னையில் ஏற்பட்ட கடும் வரட்சியைச் சமாளிக்க, திருவான்மியூரிலிருந்து சென்னை நகருக்கு நீர் வழங்க, வீராணம் குழாய்களைப் பயன்படுத்த முடியுமா என்று பரிசோதனை செய்தபோது, திட்டத்துக்கெனத் தயாரிக்கப்பட்ட 10586 குழாய்களில் 6000 மட்டுமே பயன்படுத்தத் தகுதியானவை எனத் தெரிய வந்தது. மேலும் ஆரம்பத்தில் திட்டத்தில் பல ஓட்டைகள் இருந்ததும், கண்டிராக்ட் வழங்குவதில் முறைகேடுகள் நிகழ்ந்திருப்பதும் தெரிய வந்தது. திட்டத்துக்கான 16.55 கோடி ரூபாயில் 13.25 கோடி காண்டிராக்டருக்கு முன் பணமாகவும், பொருட்களாகவும் வழங்கப்பட்டதை வியப்புடன் குறிப்பிட்டுள்ளது ஆராய்ந்த குழு. மொத்த காண்ட்ராக்ட் தொகையில் இவ்வளவு பணத்தை வேறு எந்தக் காண்ட்ராக்டருக்கும் அரசு இதுவரை தந்ததில்லை என்பதையும் இங்கு குறிப்பிட்டாக வேண்டும். இதற்கிடையே திட்டத்தின் செலவு உயர்ந்தது. உலக வங்கியிடம் உதவி கோரியபோது, அது திட்டத்துக்கு கான்கிரீட் குழாய்களுக்குப் பதிலாக இரும்புக் குழாய்கள் பயன்படுத்தினால்தான் உதவ முடியும் என்று கூறிவிட்டது. இரும்புக் குழாயில் தண்ணீர் கொண்டு வர செலவு 205 கோடி ஆகும். இவ்வளவு செலவு செய்தாலும் கிடைக்கும் நீரின் அளவு குறைவு தான். எனவே, திட்டம் கைவிடப்பட்டது.

-எம். ஜி. ஆர். சட்ட சபையில் ஆற்றிய உரையிலிருந்து.

கைத் திட்டத்துக்குத்தான் அதிக முக்கியத்துவம் தரும். எனவே இன்னும் ஓரிரு வருடங்களில் முடியவேண்டிய சோமசீலா திட்டம் முடிவுபெற இன்னும் நான்கைந்து ஆண்டுகளாவது ஆகும் என்பது நிச்சயம்.

கண்டலேரு: சோமசீலாவிலிருந்து சுமார் 40 கி. மீ. நீளக் கால்வாயில் தண்ணீர் கண்டலேருவுக்குக் கொண்டு வரப்படும். இது கிருஷ்ணா நீர் கொண்டு வர மட்டுமின்றி, பெண்ணாற்றின் உபரி வெள்ளத்தைத் திருப்பி விடவும் பயன்படும். இதற்கான வேலைகள் இன்னும் ஆரம்பமாகவில்லை. இப்போது தான் டெண்டர்கள் விடப்பட்டுள்ளன.

பூண்டி: கண்டலேரு நீர்த் தேக்கத்திலிருந்து ஆந்திரப் பகுதியில் சுமார் 150 கி. மீ. நீளக் கால்வாயும், தமிழகப் பகுதியில் சுமார் 25 கி. மீ. நீளக் கால்வாயும் வெட்டப்பட்டு, தண்ணீர் பூண்டி நீர்த் தேக்கத்துக்கு வரும். பூண்டி நீர்த் தேக்கம், கால்வாய் மூலம் செம்பரம்பாக்கம் ஏரி, புழலேரி இரண்டுடனும் இணைக்கப்படும். இந்த ஏரிகளின் நீர் மட்டம் இன்றுள்ளதை விட 2 அடி உயர்த்தப்படும். இது தவிர பூண்டிக்கு அருகில் உள்ள ராமஞ்சேரி, திருக்கண்டலம் ஆகிய இடங்களில் நீர்த் தேக்கங்கள் கட்டப்படவிருக்கின்றன.

• • •

**மக்கள் மத்தியில்:**



ஜமால் மைதீன்: ''எம். ஜி. ஆரு. என். டி. ஆரு இரண்டு பேருமே ஜனங்களுக்காக வாழறவங்க. இரண்டுபேரும் சேர்ந்து போடற திட்டம் மக்களுக்கு நன்மை தராமப் போயிடுமா? இது ரொம்ப நல்ல திட்டம். இதுல சந்தேகம் துளியும் கிடையாது. மெட்ராஸ் ஜனங்களுக்குத் தண்ணி கெடைக்கப் போகுதுன்னு நெனைக்கறப்போதே சந்தோஷமா இருக்குது'' என்கிறார் ராமநாதபுரத்திலிருந்து ஏழு ஆண்டுகளுக்கு முன் ஆந்திராவுக்கு வந்து வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கும் இவர்.

மூர்த்தி: அலுவலக விஷயமாய் ஆந்திரா வந்திருந்த சென்னை வாசியான இவர் சொல்கிறார்: வீராணத்திலே இருந்து தண்ணீர் கொண்டு வரத் திட்டம் போட்டார்கள். நிறைவேறவில்லை. ஊழல் வேறு. இப்போது கிருஷ்ணா நதித் தண்ணீர் கொண்டு வரத் திட்டம் போட்டிருக்கிறார்கள். இதுவாவது ஊழல் இல்லாமல், திட்டமிட்டபடி குறித்த காலத்தில் வரவேண்டும் என்று ஆசைப்படுகிறேன். நிறைவேறுமா என்று காலம்தான் பதில் சொல்ல வேண்டும்.



ராம ராவ்: வீட்டிலேயே ஓட்டல்வைத்திருக்கும் இவர் என். டி. ஆரை வானளாவப் புகழ்கிறார். 102 வருடமாகச் சும்மா கிடந்த திட்டம் இன்று உயிர் பெறக் காரணம் என். டி. ராம ராவ்சாருதானே! என். டி. ஆர். பல்லாண்டு வாழணும்.

ராஜு: மெட்ராஸுக்குத் தண்ணி கெடைக்குது. ஆனா நாம அதிகமாப் பணம் செலவழிக்கணுமாமே! கலைஞர் சொல்றாரு! என். டி. ஆரு சாமர்த்தியமா நடந்துக்கிட்டாரு என்கிறார் இந்தத் தமிழ்நாட்டுக்காரர்.





இஞ்சினியர் அன்வத்தப்பா: நாமெல்லாம் அடுத்தடுத்த மாநிலத்துக்காரர்கள். ஒருவருக்கொருவர் உதவிசெய்ய வேண்டியதுதானே நியாயம். இந்தியாவுக்கே இந்த விதத்தில் தமிழ்நாடும் ஆந்திராவும் வழிகாட்டியாய் விளங்குகின்றன. திட்டம் சிறப்பான ஒன்று. பலன் இரண்டு மாநிலங்களுக்கும். அப்புறம் என்ன?



அப்துல் சத்தார்: இது ரொம்பப் பெரிய திட்டம் சார்! நெறையப் பணம் செலவாகும். மாநில அரசாங்கங்களுக்கு அவ்வளவு வசதி கிடையாது. மத்திய அரசு உதவுமா என்பது சந்தேகம்தான். மூணு வருஷத்திலேந்து ஆறு வருஷம்வரை ஆகும்னு சொல்றாங்க. எல்லா வேலையும் இதுக்குள்ள முடியலேன்னு, செலவு அதிகமாயிடும். எனக்கென்னமோ திட்டம் காலா காலத்திலே முழுமையா நிறைவேறும்னு சொல்ல முடியலே.



விமலகுமாரி (சென்னைவாசி) மெட்ராஸுக்கு வேண்டியது தண்ணீர். அதுவும் உடனடியா. தெலுங்கு கங்கை வர ஆறு வருஷம் ஆகுமாமே! அதைவிட சீக்கிரமா தண்ணி கொண்டு வர, வீராணத்தையோ, வேறு ஏதாவது திட்டத்தையோ உடனடியாகச் செயல்படுத்தினால் என்ன?



ராமாத்தா:
பாரதல்லோ, கிருஷ்ணுடு, திரௌபதிகி வஸ்திரம் இச்சி மானபங்கானே காப்பாத்திச்சினாடு. கலியுகாலோ என். டி. ஆர்காரு கிருஷ்ணுடு நீரு இச்சி தாகன்னை தீர்த்தாடு. (பாரதத்திலே கிருஷ்ணர் திரௌபதிக்கு வஸ்திரம் கொடுத்து மானத்தைக் காப்பாற்றினார். கலியுகத்திலே என். டி. ஆர். கிருஷ்ணர் தண்ணீர் கொடுத்துத்தாகத்தைத் தீர்த்து விட்டார்.)



சேகர்: எனக்கென்னவோ கிருஷ்ணா வரும் என நம்பிக்கை இல்லே. அரசாங்கம் போட்ட எந்தத் திட்டமுமே — அவ்வளவு ஏன் — ஒரு சிறு பாலம் கூட குறித்த காலத்தில் செய்து முடித்ததாய்ச் சரித்திரம் கிடையாது. கிருஷ்ணா திட்டமும் முடியப் பத்து வருடமாகலாம். பதினைந்து வருடமாகலாம். இல்லே இன்னொரு அரசாங்கம் வந்து 'இது பயனற்ற திட்டம்' என்று சொல்லி வேறு ஏதாவது ஒரு திட்டம் போடலாம். விழா நடத்தலாம். ஓட்டு வாங்கலாம். கிருஷ்ணா தண்ணீர் வரும்போதுதான் நிச்சயம்.

## கட்டளைக்கால்வாய்த் திட்டம் கைவிடப்பட்டதேன்?

சென்னை நகருக்குக் குடிநீர் கொண்டுவர பரிசீலனை செய்யப்பட்ட இன்னொரு திட்டம் 'கட்டளைக் கால்வாய்த் திட்டம்' ஆண்டுக்கு 13 டி. எம். சி. தண்ணீரைத் திருச்சிக்கு அருகில் உள்ள கட்டளையில் காவிரியில் கட்டப்பட்டுள்ள அணையிலிருந்து கால்வாய் மூலம் கொண்டு வரவே இத் திட்டம். சுமார் 450 கி. மீ. தூரத்துக்குக் கால்வாய் மூலம் தண்ணீர் கொண்டு வரும் இத்திட்டத்துக்கு 203 கோடி ரூபாய் செலவாகும் என மதிப்பிடப்பட்டது. இத்திட்டத்தைச் செயல் படுத்தினால் பல்லாயிரக் கணக்கான குடும்பங்கள் வேலை வாய்ப்பு பெற வழியுண்டு. ஆனால் இத் திட்டத்தைக் கர்நாடக மாநிலம் நிறையத் தண்ணீரைக் காவிரியில் விட்டால் மட்டுமே செயல் படுத்த முடியும். தவிர காவிரிப் படுகையில் பெய்யும் மழை. நீரின் அளவும் குறைவு. இதனால் தற்போது காவிரியால் பயனடையும் பிற மாவட்டங்கள் பாதிக்கப்படலாம். இது போன்ற பிரச்னைகளால் இத் திட்டமும் கைவிடப் பட்டது.

-எம்.ஜி.ஆர். சட்டசபை உரையிலிருந்து

## சேகரித்த துளிகள்

- இந்தத் திட்டம் முழு வடிவம் பெற ஆந்திர முதல்வருக்கு மிகவும் உதவியவர் ஆந்திர பாசனத் துறை அமைச்சரான ஸ்ரீனிவாசலுரெட்டி. இவர் நெல்லூர்க்காரர்.
- தற்போது 'தெலுங்கு கங்கை' சம்பந்தப்பட்ட பணிகள் நீர்ப்பாசனத் துறையினால் கவனிக்கப்படுகின்றன. விரைவில் தெலுங்கு கங்கை பிரிவு என்று ஸ்பெஷல் பிரிவு ஆரம்பிக்கப்படவிருக்கிறது.
- தெலுங்கு கங்கை திட்டத்துக்கென நெல்லூரில் ஒரு அலுவலகம் ஆரம்பிக்கப்பட்டுள்ளது.
- தெலுங்கு கங்கை திட்டத்துக்கு ஆந்திர அரசு திரு ராமகிருஷ்ணையா என்பவரை ஸ்பெஷல் ஆபீசராய் நியமித்துள்ளது. இவர் கால்வாய், மற்றும் நீர்ப்பாசனத் துறை வல்லுனர்.
- தெலுங்கு கங்கைக் கால்வாயின் மொத்த நீளம் 450 கி. மீ.
- தெலுங்கு கங்கை கால்வாய் தமிழக ஆந்திர எல்லையில் தண்ணீர் குப்பம் என்ற இடத்தில் ஆந்திராவிலிருந்து தமிழகத்தில் நுழையும்.

எஸ். சந்திரமௌலி
புகைப்படங்கள்: கேதார்நாத்
பூண்டி நீர்த் தேக்கம் படம்: சுபா

கல்கி



1983 ஜூன் 26
ருத்ரோத்காரி ஆனி 12
மலர் : 41 இதழ் : 48



# பிர்லா

செல்லாக் காசுக்கு வழியில்லாத அந்தச் சிறுவன் தன் பன்னிரண்டாவது வயதிலேயே வேலைக்குப் போனான். பள்ளிக்கூட வாசலை மிதித்தறியாதவன். பிரிட்டிஷ் வர்த்தகர்களிடம் பணியாற்றும்போதே வியாபார நுணுக்கங்களைக் கூர்மதியால் உணர்ந்தறிந்தான். அந்த அனுபவப் படிப்பு தந்த நம்பிக்கையில் சொந்தமாக வியாபாரம் தொடங்கி, வளர்ந்து நாளடைவில் இந்தியாவிலேயே மிகப் பெரிதான தொழில் வர்த்தக சாம்ராஜ்யத்தை நிறுவினான். பெயர்: கனசியாம்தாஸ் பிர்லா.

அண்மையில் காலமான ஸ்ரீ ஜி. டி. பிர்லா, இளம் வயதிலேயே காந்திஜியின் நட்பைப் பெற்றதாலோ என்னவோ செல்வத்தின் பொருளுணர்ந்த சிலராக விளங்கினார். அண்ணலின் விடுதலைப் போராட்டத்துக்காக மட்டுமின்றி அவரது நிர்மாணப் பணிகளுக்கெல்லாம் அள்ளி அள்ளித் தந்தார். கொடுத்து மகிழ்விப்பதற்காகவே மேன்மேலும் பொருள் ஈட்டினார். அண்ணல் செல்வந்தர்களுக்கு வகுத்த தர்மகர்த்தா முறையை நன்குணர்ந்து அதன்படி செயல்பட்டார். காந்திஜிக்கு உதவியதால் அன்றைய பிரிட்டிஷ் ஆட்சியின் அதிருப்திக்கு உள்ளானார். அதனால் தமது தொழில் வர்த்தக வளர்ச்சி பாதிக்கப்படுமே என்று அவர் கவலைப்படவில்லை. தர்மத்தின் பக்கம் நின்று தைரியமாகச் செயலாற்றினார்.

நவீன விஞ்ஞான முறைகளை ஏற்றுக் கொண்டு, தொழில், விவசாயத் துறைகளில் மகத்தான முன்னேற்றங்களைச் சுதந்திர பாரதம் அடைய வேண்டும் என்ற பேரார்வத்துடன் பாடுபட்டார் பிர்லா. ஐந்தாண்டுத் திட்டங்கள் பற்றி யாரும் நினைத்துக்கூட பாராத காலகட்டத்தில் 1944லேயே ''பம்பாய் திட்டம்'' என்று அழைக்கப்பட்ட பொருளாதார வளர்ச்சித் திட்டத்தை வகுத்துத் தந்தார். இதே நேரத்தில் நமது தொன்மையான பண்பாட்டில் உள்ள சிறப்பான அம்சங்களை நாம் விட்டுவிடக் கூடாது என்பதில் அக்கறை காட்டினார்.

சர் ஸி. வி. ராமனின் தன்னம்பிக்கை, சுய கௌரவம் இரண்டையும் பிரதிபலித்த ஒரு கடிதம் ஜி. டி. பிர்லாவுக்கு வந்து சேர்ந்தது: ....22,000 ரூபாய் பெறுமானமுள்ள இந்தக் கருவி இருந்தால் என் ஆராய்ச்சி பூர்த்தியடையும்; நான் நோபெல் பரிசு பெறுவது நிச்சயம்.... மறு தபாலில் காசோலையை அனுப்பினார். அவருக்கு மட்டுமா? ஹரிஜனப் பணியாற்றும் நிறுவனங்களுக்கு, விஞ்ஞான, தொழில் நுணுக்கக் கல்வி—ஆய்வுக் கூடங்களுக்கு, கோயில்களுக்கு, இன்னும் பல நற்பணிகளுக்குக் கோடி கோடியாக வழங்கினார் வள்ளல்.

சுயமாகப் படித்து ஞானம் பெற்ற பிர்லா, சிறந்த எழுத்தாளராகவும் விளங்கி, பாமர மக்களுக்கும் பொருளாதார அடிப்படைகளை விளக்கினார்; மகாத்மாவின் நிழலில் தாம் தங்கிய அனுபவங்களை விவரித்தார்.

நேரத்தைப் பொன்னாக மதித்தவர்; சுவரை வைத்தே சித்திரம் எழுத வேண்டும் என்று உணர்ந்து தேக ஆரோக்கியத்தைப் பேணிக் காத்தவர்; இதற்காக நாள் தவறாமல் அதிகாலையில் நடை பயின்றவர்; —அப்படி நடைபயிலும்போதே தமது 89வது வயதில் காலமானார்.

''சோஷலிஸம், சோஷலிஸம்'' என்று கோஷமிட்டுக் கொண்டு இந்நாட்டின் செல்வந்தர்கள்மீது மக்களுக்குப் பொறாமையையும் வெறுப்பையும் வளர்த்து விடுவது மிகவும் எளிது. ஆனால் நாடு துரிதமான தொழில் — பொருளாதார வளர்ச்சியை அடைய வேண்டுமானால் ஒரு பிர்லா அல்லது ஒரு டாட்டா போதாது. அப்படி ஆயிரக் கணக்கானவர்கள் தோன்ற வாய்ப்பான சூழ்நிலையை அரசு உருவாக்க வேண்டும். அப்போதுதான் லட்சோப லட்சம் மக்கள் வேலை வாய்ப்புக்களைப் பெறுவார்கள். வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதன் மூலம்தான் தேசத்திலிருந்து வறுமையை விரட்ட முடியும்.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# கோத்ரெஜ் ஸ்டோர்வெல் — ஆயுட்கால அன்பளிப்பு!



கோத்ரெஜ் ஸ்டோர்வெல், எந்த சந்தர்ப்பத்திற்கும் ஏற்ற அருமையான அன்பளிப்பு. ஆயுட்காலம் முழுவதும் நினைவில் நிற்கும் அன்பு பரிசு. வழக்கமான மற்ற ஸ்டீல் அல்லது மர அலமாரிகளோடு ஒப்பிடும்போது, இந்தப் பயன் மிக்க, கவர்ச்சியான, ஸ்டீல் அலமாரி தனக்கே உரிய, நீடித்த உழைப்பாற்றல் மற்றும் கூடுதல் பாதுகாப்பு போன்ற, சலுகைகளைக் கொண்டது.

கோத்ரெஜிடம் மட்டுமே உள்ள வண்ணப் பூச்சு முறை காரணமாக, கீறல் விழாத மேம்பட்ட மெருகு. இதன் அழகிற்கு மேலும் பொலிவூட்டுகிறது.

தவிரவும் முழுநீள 137 செ.மீ. வெளி காட்டு 'ப்ளேட்' கண்ணாடி, தகர்க்க முடியாத பூட்டுகள், மறைவான கீல்கள், இறுக மூடிக்கொள்ளும் மும்முனைப் பூட்டு மற்றும் அட்ஜஸ்ட் செய்யக்கூடிய ஷெல்புகள்.

இத்தனைச் சிறப்புகளாலும் கோத்ரெஜ் ஸ்டோர்வெல் மறக்க முடியாத, பல தலைமுறைகளுக்கு உழைக்கும் அன்பளிப்பாக அமைகிறது.

கோத்ரெஜ் Godrej®

மேம்பட்ட தொழில்—
நுட்பம் மற்றும் மதிப்பு.

ULKA-GS-2-82 TAM




## 4

ஓர் உறுமல் ஒலி அவர்களைத் திரும்பிப் பார்க்கச் செய்தது. கதவருகே ஒரு நாய். அதன் விழிகள் அவர்களை நோக்கி நிலைகுத்தி நின்றன. அதன் வாய் திறந்திருந்தது — பயங்கரமான கோரப் பற்களைக் காட்டியபடி.

பால்லோ, மார்டின் இருவருக்கும் இயல்பாக ஏற்பட்ட ஒரே சிந்தனையுடன் தப்பிச் செல்ல ஜன்னல் பக்கத்தை அணுகிய போது குறுக்குக் கம்பிகள் ஏதும் இல்லாத அந்த ஜன்னலில் சட்டம் போட்டு மாட்டிய படம் போல ஒரு காட்சி—

மாட்டியனைத் திகிலில் ஆழ்த்திப் பைத்தியம் பிடிக்கச் செய்து மரணத்தை நாட வைத்த —

அதே கோரக் காட்சி —

இவர்களையும் தாக்கியது.

ஓர் ஓநாயின் மண்டை ஓடு! பார்வை இன்றி அவர்களை வெற்று நோக்கில் வெறித்தவாறு அது வளர்ந்து வளர்ந்து ஆகாயத்தையே அளாவியது. மண்டையோட்டின் உட்புறமிருந்து புறப்பட்ட ஓர் ஒளி ரத்த நாளங்கள் மட்டும் துடிப்பதைப் புலப்படுத்தியது!

இது என்ன பிரமையா, மந்திர தந்திரமா, சைத்தானின் மகன் உருவாக்கும் தோற்றமா?

எதையும் சிந்திக்க முடியாமல் அவர்கள் திகைத்து உளறியபடி பின்வாங்கிய போது மார்ட்டின் எதன் மீதோ தடுக்கி விழுந்தான். மூர்ச்சிரைக்கக் கிடந்த நிலையிலிருந்தே பார்த்த போது, பாதிரிகளின் வாழ்விடமான அந்தப் பழங்காலக் கட்டிடத்தின் முற்றத்தில் தரையோடு தரையாக ஒரு கிணற்றின் விளிம்பு தென்பட்டது. அதன் மீது கம்பி போடப்பட்டிருந்தது. அதில் ஒரு பகுதியான கம்பிக் கதவு திறந்திருந்தது. ஊர்ந்து சென்று அதன் வழியே கிணற்றுக்குள் புகுந்து கம்பிகளைப் பிடித்துக் கொண்டு தொங்கினான் மார்ட்டின். பால்லோவும் அவனுடன் சேர்ந்து கொண்டான். அந்தப் பயங்கர நாயிடமிருந்து தப்ப வேறு வழியில்லை. கம்பிகளைப் பிடித்துக் கொண்டு தொங்கியபடியே கிணற்றின் சுவரில் பாதம் பாவ ஏதேனும் விளிம்பு கிடைக்குமா என்று கால்களை அசைத்துத் துழாவினார்கள். திடீரென்று கம்பிக் கதவு மேலே மூடிக் கொண்டது! நாயின் உறுமல் கேட்டது. மாட்டியனின் ரத்தம் படிந்திருந்த மார்ட்டினின் விரல்கள் வழுக்கின. ரத்த வாடையால் ஈர்க்கப்பட்ட நாய் அவன் விரல்களை நெருங்கியது.... மார்ட்டின் கீழே விழுவதை பால்லோ பீதியுடன் பார்த்தான். ஒரிரு கணங்களுக்குப் பிறகு ஒன்றும் தெரியவில்லை. அந்தகார இருட்டு. ஆனால்

மார்ட்டினின் 'வில்' என்ற கூக்குரலும் ஐம்பது அடிக்குக் கீழே அடிவாரத்தில் அவன் தண்ணீர் வற்றிய பாறையைத் தாக்கிய போது ஏற்பட்ட 'தொப்'பென்ற சத்தமும் அவன் செவிகளைத் தாக்கின. தன்னால் இன்னும் எத்தனை நேரம் இந்த வேதனையைத் தாக்குப் பிடிக்க முடியும் என்று சிந்தித்தான் பாவ்லோ.... ஒரு நிமிஷம்.... கம்பிகளைப் பிடித்திருந்த விரல்களில் தாங்க முடியாத வலியை அந்த நாய் உண்டாக்க....

* * *

டாமியன் தார்னும் ஹார்வி மனும் தூதரகத்தின் மொட்டைமாடியில் உலாத்திக் கொண்டிருந்தார்கள். ''அப்படியானால் நான்கு பேர் அழிந்தார்கள், என்று சொல்லுங்கள்'' என்றான் ஹார்வி.



''இன்னும் மூன்று கத்திகள் பாக்கி'' என்றான் டாமியன். திடுமென்று நின்று, ஹார்வியை நேருக்கு நேர் பார்த்தான். ''கடவுளின் மகன் மறுபிறவி எடுத்து விட்டான். எங்கே என்றுதான் தெரியவில்லை. அவனைக் கண்டுபிடித்து அழித்தே ஆக வேண்டும்; இனியும் கால தாமதம் செய்வதற்கில்லை. இதற்கு ஒரே வழி.... இந்த நாட்டில் மார்ச் 24-ம்தேதி நள்ளிரவுக்கும் அதிகாலைக்கும் இடையில் பிறந்த எல்லாக் குழந்தைகளையும் தீர்த்துக்கட்டி விடுவது தான்....''

* * *

ஃபிராங்க் ஹட்சின்ஸ் ஒரு இளம் வக்கீல். அவனுக்கு டாமியன் தார்னிடமிருந்து ஒரு ஃபோன் வந்தது. உடனே அவன் மிகுந்த உற்சாகத்துடன் தன்னிடமிருந்த விலாசப் புத்தகத்தை எடுத்தான். அதில் பல விலாசங்கள்.... டெலிஃபோன் நம்பர்கள்.... ஒவ்வொருவருக்காகப் போன் செய்ய ஆரம்பித்தான்.

நாடெங்கிலும் பலர், ஆண்கள், பெண்கள் வாலிபர்கள், யுவதிகள் என்று பலபட்டவர் டெலிஃபோனில் செய்தி கேட்டதும் ஒரு ஸூட்கேஸில் சில துணிமணிகளை அள்ளிப் போட்டுக் கொண்டு புறப்பட்டார்கள். எல்லாரும் ஒரு குறிப்பிட்ட இடத்தை நோக்கிப் பயணப்பட்டார்கள். அனைவரிடத்திலும் ஓர் ஆர்வப் பரபரப்பு. அவர்கள் அத்தனை பேரும் சைத்தான் பக்தர்கள். டாமியன் தார்னுக்காக எதையும் செய்வார்கள். அவன் உத்தரவிட வேண்டியது தான். இவர்களை—சைத்தானின் பக்தர்களை—இனம் கண்டு, ஒன்று திரட்டித்தயார் நிலையில் வைத்திருக்க, டாமியன் தார்னின் கட்டளைப்படி இயங்கிய ஃபிராங்க் ஹட்சின்ஸ், மூன்று ஆண்டுகள் பாடுபட்டிருந்தான். பட்டபாட்டுக்கெல்லாம் பலனை இப்போது காணப் போகிறோம் என்பதில் அவனுக்கு அளவிட முடியாத மனநிறைவு!

* * *

டாமியன் தார்னைக் கொல்வதற்குஅடுத்த படியாகத் தனக்கு அனுமதி வழங்கவேண்டும் என்று பாதிரி டிகார்லோவிடம் அனுமதி கேட்டான் அன்டோனியோ. ''மற்றவர்கள் மறைந்திருந்து அவனைத் தாக்க முயன்று தோல்வியுற்றனர். தவறு அதில் தான். சைத்தானின் மகனை வெளியே இழுத்து, வெட்டவெளியில் நேருக்கு நேர் நின்று போராட வேண்டும். அப்போது தான் வெற்றி கிட்டும்.''டிகார்லோ ஒப்புக் கொண்டார். அவருக்கு வேறு வழி தோன்றவில்லை. ஸைமனும், அன்டோனியோவும் புறப்பட்டார்கள்.

அந்தக் கிராமத்தில் ஒரு மதுபானக் கடைக்குள் புகுந்து விவசாயிகளுடன் பேசினார்கள். அன்டோனியோ தனக்கு நரி வேட்டையில் விருப்பமென்று காண்பித்துக் கொண்டான். ''நரி வேட்டைக்குப் பயிற்சி பெற்ற டெரியர் நாயும் ஒரு

குதிரையும் கிடைக்குமா?'' என்று கேட்டான். ''காசு கொடுத்தால் என்னதான் கிடைக்காது?'' என்று பதில் கேள்வி பிறந்தது.

அது ஒரு பெண் நரி. தன் குகைக்குள் பதுங்கி இருந்தது. மோப்பம் பிடித்து உள்ளே சென்று அதன் கழுத்தைக் கவ்வப் பாய்ந்தது அன்டோனியோ வாங்கியிருந்த நாய். நரி வெளிச்சத்துக்கு ஓடி வந்தது. குகைக்கு வெளியே ஸைமன் திறந்த கூண்டுடன் காத்திருந்தான். பயத்தில் கண்மண் தெரியாமல் ஓடி வந்த நரி, கூண்டுக்குள் பாய்ந்து அதன் சுவரில் முட்டி மோதிக் கொண்டு சரிந்த மறுகணம் ஸைமன் கூண்டுக் கதவைச் சரேலென்று அழுத்தி மூடினான். டெரியர் நாய் கூண்டைச் சுற்றிச் சுற்றி வந்து ஆவேசத்துடன் குரைத்தது. குதிரை மீது ஆரோகணித்த அன்டோனியோ குனிந்து கூண்டைத் தூக்கினான். மற்றொரு கரத்தை வெற்றிக்கு அடையாளமாக உயர்த்தினான். அவன் திட்டத்தின் முதல் பாதி வெற்றி பெற்று விட்டது.

இது நடந்து சுமார் ஒரு மணி நேரத்துக்குப் பிறகு டாமியன்நார்ன் தன் நண்பர்களுடன் நரி வேட்டையாடப் புறப்பட்டான். கொம்பு ஊதப்பட்டது. குதிரைகள் புயலெனப் பறந்தன. அவர்களுக்கு முன்னால் நாய்கள் குரைத்துக் கொண்டு பாய்ந்தன.

சற்றுநேரத்தில் களத்தை அடைந்தனர். வேட்டை சூடு பிடித்தது.

டாமியன் கண்களுக்குத் தான் அந்த நரி முதல் முதலில் தென்பட்டது. சரேலெனக் குதிரையைத் திருப்பிப் பின் தொடர்ந்தான். நாய்கள் புதர்களினூடே பாய்ந்து வேகமாய் முன்னேறின.

புதர்கள் அடர்ந்த பகுதியையும் காட்டுப் பிரதேசத்தையும் பிரித்த ஒரு வேலியருகே அன்டோனியோ நின்றிருந்தான். கைடு குலைரத் தாழ்த்திவிட்டுத் தரையில் குதித்தான். தோளில் தொங்கிய துப்பாக்கியை எடுத்துச் சரிபார்த்துக் கொண்டான். அவன் எதிர்பார்த்த தருணம் நெருங்குகிறது. அவன் சுமந்த கூண்டுக்குள் சிக்கியிருந்த நரி சீறியது.

டாமியன் துரத்தி வந்த நரி கண்ணுக்குக் கட்டுப்பட்டது. சட்டென்று குறிபார்த்து அதைச் சுட்டான் அன்டோனியோ. துள்ளி எழுந்து துடிப்புடன் பின்பக்கமாக செத்து விழுந்தது அந்த நரி. குதிரையிலிருந்து இறங்கி ஓடிச்சென்று அந்த நரியின் உடலைப் பற்றி எடுத்துச் சற்றுத் தூரத்தில் புதர்களுக்கிடையே விட்டெறிந்தான் அன்டோனியோ. பிறகு வேட்டைநாய்களின் குரைப்புச் சத்தத்துக்காகவும் குதிரைக் குளம்புகள் எழுப்பும் ஒலிக்காகவும் காத்திருந்தான். சில விநாடிகளில் அவை அருகில்

## நாலு வார்த்தைகள் போட்டி முடிவு

**சரியான விடைகள்: 1. நிறைந்த 2. பணியும் 3. சமயத்துலே 4. எல்லாத்தையும்**

**மேற்படி போட்டியில் நாலு வார்த்தைகளையும் சரியாக எழுதியவர்கள் எவருமில்லை. மூன்று வார்த்தைகளைச் சரியாக எழுதியவர்கள் 71 பேர் இவர்களில் குலுக்கல் முறையில் பத்துப் பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு அவர்களுக்குத் தலா ரூ 25 பரிசு அனுப்பப்படுகிறது.**

1. ஜி. சாந்தி, 21, நடுத் தெரு, நரசிம்மபுரம், கரூர்.
2. என். லக்ஷ்மி, c/o திரு என். நாராயணன், லேபர் ஆபீஸர், குளோத்திங் ஃபாக்டரி, ஆவடி, சென்னை-56
3. ஏ. ராமசாமி, இந்தியன் வங்கி, கந்தர்ப்பெருமாள் கோவில் 614208
4. கே. எஸ். நாகராஜன், 8, குளாலயம், அயன்புரம், சென்னை-23
5. என். ஜெயலட்சுமி, 12, நாகதீன் கான் பகதூர் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5.
6. வி. சுபத்ரா, 11, முதல்தெரு, வடக்கு கோபாலபுரம், சென்னை-86
7. அ. சேதுராமலிங்கம், 7, சர்க்கரைக் குளம்தெரு, ஸ்ரீவில்லிபுத்தூர்-626125
8. கே. தேவிகா, 39, திருநகர், திருவானைக்கோவில், திருச்சி-620005.
9. வி. லலிதா, 1084, செக்டர் 7, ஆர். கே. புரம், புதுடில்லி 110022.
10. என். ஜி. பொன்னுசாமி, மேலாளர், இந்தியன் கமர்ஷியல் ஸிண்டிகேட், த. பெ. எண் 1005, ஆர். எஸ். புரம், கோவை-641002.

---

**தஞ்சை மாவட்ட என் கண் ஸ்ரீவேலவன் நித்திய பூஜை அறக்கட்டளைக்கு பொது மக்கள் நன்கொடைகளை எவ்வித செலவுமின்றி எங்கள் வங்கியின் எல்லா கிளைகளின் மூலமும் அனுப்பலாம்.**

# எந்தரோ மகானுபாவுலு



**(ஆங்கிலத் தலைப்புடன் தமிழ் நாடகங்கள் வரும்பொழுது தெலுங்குத் தலைப்புடன் தமிழ் நாடகம் போட்டால் என்ன?)**

'கேதாரி'ல் செயற்கையான கதைக்கு, வசனகர்த்தா ஸ்ரீகவி கையும் காலும், கண்ணும் மூக்கும் மட்டும் வைத்ததோடு நிற்காமல் ஜீவனையும் சேர்த்தே வைத்திருக்கிறார். கர்நாடக சங்கீதத்துக்குச் சபாக்காரர்களே அதிக வரவேற்புக் கொடுக்காத நாளில், கர்நாடக இசையையே கதையின் கருவாக வைத்து உருவாக்கப்பட்ட நாடகத்தை மேடை ஏற்றக் கொஞ்சம் துணிச்சல் இருக்கத்தான் வேண்டும். அதிலும் காட்சிகளுக்கு இடையிடையே கர்நாடக இசையையே பின்னணியாக வழங்குவதற்கு இன்னும் தைரியம் வேண்டும்! (செவிட்டில் அறைகிற மாதிரி கிடாரும் டிரம்மும் கிடுகிடுக்க வைக்கும் பின்னணி இசை கேட்டுப் பழகிப்போன செவிகளுக்கு, இந்தப் பின்னணி இசை இதமாய் இருக்கிறது.) சங்கீத வித்துவான் மதுரை ஜி. எஸ். மணியின் குரல் சுபபந்துவராளியிலும் பாகேஸ்ரீயிலும் சில நிமிடங்களுக்கு இனிமையாக இழைகிறது...

இம்மாதிரி நாடகங்களில் பாத்திரத்தின் தன்மையை (காப்பிப் பொடி வாங்க ரூபாய் கொடுத்தால் கர்நாடக சங்கீத காசெட் வாங்கும் ஹீரோ) சற்று உயர்த்திக் காட்ட 'மெலோடிராமா' தேவைதான். எம். பானுமதி, ராஜசேகர், நீலகண்டன் எல்லோரும் உணர்ச்சி வசப்பட்டு நடிப்பது அதனால் மிகையாகத் தெரியவில்லை. சோகமான முடிவுதான். பிரம்மாண்டமான நடராஜர் சிலைக்குக் கீழே சாரங்கன் பாட, மூர்த்தி அவன் கரங்களிலேயே தலை சாய்க்க—

ஓர் இன்பமயமான முடிவை எதிர்பார்க்க முடியாதுதான். ஆனால் வித்தியாசமான நாடகம் என்பதே பார்ப்பவர்களுக்குத் திருப்தியைக் கொடுக்கும் என்றால் இந்த முடிவுதான் பொருத்தமானதாக இருக்க முடியும்.

பாலா, சபா செக்ரடரியாக வந்து நகைச்சுவை 'டிராக்'கைக் கவனித்துக் கொள்ளுவதோடு, நாடகத்தை சுவாரஸ்யமாக இயக்கியிருக்கிறார்.

இந்த நாடகம் பார்ப்பவர்களுக்குக் கர்நாடக இசை மீது (பற்று, ஆர்வம், அக்கறை இவை தேவையில்லை) கொஞ்சம் மதிப்பு இருந்தால் போதும்: நிச்சயம் ரசிக்கலாம்.

— சாருகேசி

---

கேட்டன. கூண்டுக் கதவைத் திறந்தான். அவன் சிறைப்படுத்தியிருந்த நரி விடுதலை பெற்றதில் மகிழ்ந்து ஒரே ஓட்டமாக ஓடிற்று. டாமியனின் நாய்கள் அதைத் துரத்துவதையும் பின்னாலேயே டாமியனும் குதிரையில் விரைவதையும் புதர்களிடையே ஒளிந்திருந்து கவனித்தான்.

பின்னர் தான் கட்டு வீழ்த்தியிருந்த நரியை ஒரு கயிற்றில் கட்டி அதன் மறுமுனையைப் பிடித்துக் கொண்டு எதிர்த்திசையில் குதிரையை வெகு வேகமாகச் செலுத்தினான். டாமியனுக்குப் பின்னால் சற்றுத் தூரத்தில் வேட்டைக்கார நண்பர்கள் வந்து கொண்டிருந்தனர். அவர்களுக்கு முன்பாக வந்த அவர்களுடைய நாய்கள் அன்டோனியோவையும் அவன் கயிறு நுனியில் கட்டி இழுத்துச் சென்ற நரியையும் பின் தொடர்ந்தன. வேட்டைக்காரர்களும் இயல்பாக நாய்களைப் பின்தொடர்ந்தனர்.

'ஆகா! இரண்டாவது கட்ட வெற்றி!' என்று மகிழ்ந்தான் அன்டோனியோ. டாமியன் தானே அவன் நண்பர்களிடமிருந்து பிரித்துத் தனியே அனுப்பியாகிவிட்டது. இன்னும் சற்றுத் தூரம் சென்றதும் இவர்களைக் குழப்பத்தில் ஆழ்த்தி விட்டு அவனும் பிரிந்து செல்ல வேண்டியதுதான். டாமியன் தான் எந்த இடத்துக்குப் போவான் என்பது அன்டோனியோவுக்குத் தெரியும். நரியைப் பிடித்தானே அதே குகைக்குத் தான்! அந்த நரி, தன்னுடைய இருப்பிடத்துக்குத்தான் தானே அழைத்துப்போகும். அங்கே ஸைமன் காத்திருப்பான். அன்டோனியோவும் போய்ச் சேர்ந்து கொள்வான்.

(அடுத்த இதழில் முடியும்)

# தலைமைச் செயலர்

பதவிகள் சிலருக்கு உயர்வைக் கொடுக்கும். சிலர் பதவிகளுக்கு உயர்வைக் கொடுப்பார்கள். தமிழக அரசின் தலைமைச் செயலர் பொறுப்பை நிர்வகித்து வரும் திரு கே. சொக்கலிங்கம் இரண்டாம் வகையைச் சேர்ந்தவர். அண்ணா முதலமைச்சரா யிருந்தபோது அவரது அந்தரங்கச் செயலர் பதவி வகித்தவர் என்ற பெருமை இவருக்கு மட்டுமே உண்டு.

திரு சொக்கலிங்கம் மாயூரத்தை அடுத்த மங்கநல்லூரைச் சேர்ந்தவர். அண்ணாமலைப் பல்கலைக் கழக பௌதிக (ஆனர்ஸ்) மாணவர். (இவருக்கு சீனியர் நாவலர் நெடுஞ்செழியன்; சக மாணவர் இரா. செழியன்.) அதே பல்கலைக் கழகத்தில் ஒரு வருஷம் பௌதிக விரிவுரையாளராகப் பணியாற்றிய அனுபவமும் இவருக்கு உண்டு. 1947ல் மாவட்ட வன இலாகா அதிகாரியாகச் சென்னை அரசாங்கப் பணியில் சேர்ந்தவர், 1955ல் ஐ.ஏ.எஸ். தேறி, தஞ்சாவூரில் முதல் முதலாகப் பதவி ஏற்றார்.

''தமிழக மின்வாரியத் தலைமை அதிகாரியாக 78-79ல் பணியாற்றினீர்களே, உங்கள் பதவிக் காலத்தில் நிகழ்ந்த முக்கியமான பணிகள் என்ன?'' என்று கேட்டபோது, ''சுறுசுறுப்பாக, வேகமாக அப்போது பணிகள் நடைபெற்றன. தூத்துக்குடி அனல் மின் நிலையப் பணிகள் அப்போதுதான் முடிந்தன. ஊழியர்களின் சம்பள நிர்ணய ஒப்பந்தம் சமயத்தில் செய்யப்பட்டு, சுமுகமாக முடிந்தது'' என்று திருப்தியுடன் தெரிவித்தார்.

திரு சொக்கலிங்கம் அதிகாலை நாலரை மணிக்கே எழுந்து விடுகிறார். பைல்களைக் கவனிக்கிறார். 'ஸ்விம்மிங்' போய்விட்டு வந்த பின் சில யோகாசனப் பயிற்சிகளைச் செய்கிறார். இவை தவிர பிராணாயாமமும் செய்கிறார். எட்டரை மணிக்கே தலைமைச் செயலகத்துக்குக் கிளம்பி விடுகிறார். ஆறு மணி வரை அங்கே அரசுப் பணிகள். மாலை வீடு திரும்பியதும் சிறிது ஓய்வுக்குப் பிறகு, குடும்பத்தாருடன் சிறிது நேரம் செலவிடுகிறார். டி.வி. அதிக நேரம் பார்க்கிறதில்லை. செய்திகள், இசை நிகழ்ச்சிகள் மட்டுமே பார்க்கிறார். மறுபடியும் பைல்களைக் கவனிக்கிறார். (''டி.வி.யில் படம் பார்ப்பதோடு சரி. சினிமாவில் அவ்வளவு ஈடுபாடு இல்லை!'') நிறையப் புத்தகங்கள் படிக்கிறார்; பெரும்பாலும் விஞ்ஞான நூல்களே.

அண்ணா நோயுற்றதும் சிகிச்சைக்காக அமெரிக்கா சென்றபோது, உடன் சென்றார் திரு சொக்கலிங்கம். ''அண்ணா ஓர் அத்யந்த நண்பரைப் போல என்னுடன் பழகினார்; முதலமைச்சர் – செயலர் என்ற முறையிலே அல்ல!''

''நமது அரசாங்க அலுவல் செயல் முறைக்கும் மேற்கத்திய நாடுகளின் அரசு அலுவல் அமைப்புக்கும் குறிப்பிடும்படி ஏதேனும் வித்தியாசம் காண்கிறீர்களா?''

''நாம் பிரிட்டிஷ் முறையைத்தான் இன்னும் பின்பற்றுகிறோம். என்றாலும் இந்த முறையும் பல மாற்றங்களுக்கு உள்ளாகி வருகின்றது. ஆனால் இந்த மாற்றங்கள் நாம் எதிர்பார்க்கிற அல்லது நினைக்கிற வேகத்தில் நிகழ்வதில்லை. தவிர, பலபேர் சேர்ந்து தான் ஒரு முடிவு எடுக்க முடிகிறது. அதனால் தாமதம் தவிர்க்க முடியாததாகிறது. அதிகாரங்களைப் பகிர்ந்துகொடுத்து (decentralise) முடிவு எடுக்கும் பணியையும் பரவலாக்கினால் அரசு அலுவல்களில் இந்தக் குறையையும் போக்கிவிட முடியும்!''

கர்நாடக இசையில் பற்று இருக்கிறது மட்டுமல்ல, வயலின் கற்றுக்கொள்ளச் சிறு வயதில் ஆசைப்பட்டாராம். நல்ல ஆசிரியர் கிடைக்காததால் இவர் ஆசை நிறைவேறவில்லை. ஆனால் மூத்த மகன் குமார் வயலின் கற்கச் செய்தார். ''அயல் நாட்டுக்கு ஒரு முறை செல்லும்போது அவன் கையில் இருந்த வயலின் பெட்டியைப் பார்த்துவிட்டு, அவன் ஏதோ புகழ் பெற்ற வயலின் கலைஞர் என்று எல்லோரும் மொய்த்துக் கொண்டார்கள். 'படிப்பில் உன்னுடைய ஃபர்ஸ்ட் கிளாஸ், ஃபர்ஸ்ட் ராங்க் எல்லாவற்றையும் விட, உன் வயலின்தான் உன்னைப் பிரபலமாக்கி விட்டது பார்!' என்று நான் தமாஷாகச் சொன்னேன்!''

திரு சொக்கலிங்கத்துக்கு இரண்டு புதல்வர்கள்; மூன்று புதல்விகள். மூத்த மகன், மகள் இருவருக்கும் திருமணமாகி விட்டது. கடைசிப் பையன் டான்பாஸ்கோ மாணவன்.

ஆபட்ஸ்பரியை ஒட்டிய சொக்கலிங்க நகரில், 'நிலா' இல்லத்தில் வசிக்கிறார் திரு சொக்கலிங்கம். எளிமையும் அடக்கமும் திரு சொக்கலிங்கத்திடம் வெளிப்படையாகத் தெரிகின்றன.

பேட்டி: சாருகேசி






# கற்றுக் கொள்ளக் கூடை விஷயங்கள்

“இந்தியக் கூடைப் பந்தாட்டக்காரர்கள் கற்றுக்கொள்ள வேண்டியது கூடை கூடையாக இருக்கிறது'' என்றுதான் சொல்வார்கள், சென்னையில் அவர்கள் சமீபத்தில் அமெரிக்க அணியுடன் விளையாடியதைப் பார்த்தவர்கள். ஆட்டம் ஆரம்பித்து ஐந்தாவது நிமிஷத்தில் 10–10 என்று சரிசமமாக இருந்தது ஸ்கோர். ஆனால் அமெரிக்க அணியினர் (அத்லட்ஸ் இன் ஆக்ஷன்) கடைசியில் 25 பாயிண்டுகள் வித்தியாசத்தில் இந்திய அணியைத் தோற்கடித்தனர்.

● பந்தை மாற்றி மாற்றி பாஸ் செய்து கூடைக்கருகில் கொண்டு செல்லும் மனோபாவம் இந்திய அணியினருக்கு இல்லை. கையில் பந்து கிடைத்தவர்கள் எல்லாம் கோர்ட்டின் நடுவிலிருந்து பாஸ்கெட்டுக்கு முயற்சி செய்து தனது பேராசையை வெளிக் காட்டிக் கொண்டனர். (ஆனால் அமெரிக்க அணியினர் கூடைக்கு அடியிலும் பந்தை மாற்றிக் கொண்டது அவர்களது கூட்டு முயற்சிக்கும் வெற்றிக்கும் எடுத்துக் காட்டாக விளங்கியது.)

● கூடைப் பந்தில் உயரமாக இருப்பவர்கள் அதிக ஸ்கோர் செய்வார்கள் என்று யாராவது நினைத்தார்களானால் அது தவறு. இந்திய அணியினரின் சராசரி உயரம் ஆறடிக்கு மேல். உயரமாக இருந்தார்களே தவிர உபயோகமாக இல்லை.

● பந்தை பாஸ் செய்வதில் வேகம் போதாது. மூன்று விநாடிக்கு மேல் கையில் பந்தை வைத்து முழித்துக் கொண்டு ஆட்டத்தின் விதிகளை அடிக்கடி மீறினர்.

● அமெரிக்க அணியின் வீரர்களை பந்தைப் பாஸ் செய்ய விடாமல் மடக்கச் சில சமயங்களில் கொஞ்சமும் முயற்சி செய்யவில்லை. எந்தவிதத் தடையும் இல்லாமல் அமெரிக்க அணியினர் பாஸ்கெட்டை நெருங்கிப் பல பாயிண்டுகளை எடுத்தார்கள்.

மறுநாள் கன்னிமாராவில் தங்கியிருந்த அமெரிக்க அணியினரைப் பார்க்கப்போய் அத்லட்ஸ் இன் ஆக்ஷனைப் பற்றி விசாரித்த போது கிடைத்த தகவல்கள்:

● இந்த அணியில் இருப்பவர்களெல்லாம் வெவ்வேறு தொழிலைச் செய்பவர்கள்.

● நோக்கம்: (1) செல்வது, வெல்வது. (2) நல்லெண்ணத்தை வளர்ப்பது (3) கிறிஸ்துவின் புகழைப் பரப்புவது (அன்று ஆட்டத்தின் முடிவில் கிடார் வைத்துக்கொண்டு 'பாட்டுப்' பாடியதன் அர்த்தம் புரிந்தது.)

அன்று நடந்த போட்டியில் 'பலே' என்று சொல்லும்படி விளையாடியவர் இந்திய காப்டன் அஜ்மீர் சிங்தான். இந்திய அணியினர் எடுத்த 55 பாயிண்டுகளில் இவருடைய பங்கு 32 பாயிண்டுகள். சபாஷ் அஜ்மீர் சிங்!

-நமது நிருபர்கள்

# உயிர்

இந்த உலகில் கோடிக் கணக்கான உயிரினங்கள் இருக்கின்றன. பிராணன் (உயிர்) உள்ளவை எல்லாம் பிராணிகள். இவை நான்காக அற நூல்களில் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஸ்வேதஜம், உத்பித்ஜம், அண்டஜம், ஜராயஜம் ஆகியன.

ஸ்வேதஜம்: அதாவது புழுக்கத்திலிருந்து ஜனிக்கக் கூடியவை. புழு, பூச்சி, கொசு போன்ற சிறு சிறு கிருமிகள்.

உத்பித்ஜம்: பூமியிலிருந்து பூமியைப் பிளந்து வெளி வரக் கூடிய இனங்கள். அதாவது, மரம், செடி, கொடி முதலியன. அத்துடன் சில புழுக்களும் கூட.

அண்டஜம்: அதாவது முட்டையிலிருந்து வெளிவரக் கூடியவை. பக்ஷி, கோழி, வாத்து முதலியன.

ஜராயஜம்: கருப்பையிலிருந்து வெளி வரக் கூடியவை. அதாவது ஆடு, மாடு முதல் மனிதன் வரை. இவைகளுள் ஓர் அறிவு முதல் ஐந்து அறிவு வரையில் உள்ள பிராணிகள் இருக்கின்றன. சிலவற்றுக்கு ஓரிரு புலன்களே இயங்கும். ஐம்புலன்களில் எல்லாமே சிறப்பாக இயங்கப்பெற்ற பிராணிகள் சிலவே. மனிதனே இந்த ஐந்து அறிவையும் உடையவன். இதற்கு மேலாக ஒவ்வொரு பொருளையும் பகுத்து அறிந்து கொள்ளும் வகையில் ஆறுவதான பகுத்தறிவையும் உடையவன். எது நல்லது, எது தீயது, எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யக் கூடாது, எதைச் செய்தால் நல்ல பயன் கிடைக்கும், எதைச் செய்தால் தீய பயன் கிடைக்கும் என்பதைப் பற்றி சிந்திப்பது பகுத்தறிவு. இந்த உடம்பைக் காட்டிலும் வேருக உள்ள ஆத்மாவைப் பற்றி யோசிப்பது பகுத்தறிவு. கண்ணுக்குத் தெரியாததான பல பொருள்களைப் பற்றி நூல்களின் மூலமாகவும் சொந்த அறிவு, அனுபவத்தின் மூலமாகவும் அறிந்து கொள்வது பகுத்தறிவு. இந்த உடம்பையே நிலையானது என நினைத்துக் கொண்டு பல பணிகளைச் செய்து கொண்டிருக்கிற நாம் ஒரு நாள் இந்த உடம்பு அழியப் போகிறது என்பதை நிச்சயமாக உணர்வதற்கு உதவுவது பகுத்தறிவு. இந்தப் பகுத்தறிவுதான் விஞ்ஞானம் என்ற சொல்லாலும் குறிப்பிடப் படுகிறது. ஞானம் என்றால் அறிவு. விஞ்ஞானம் என்றால் விசேஷமான அறிவு; பகுத்தறிவு.



இயந்திரங்களைப் பற்றி அறிந்தவன் இயந்திர விஞ்ஞானி. தாவரங்களைப் பற்றி ஆராய்பவன் தாவர இயல் விஞ்ஞானி; நட்சத்திரங்கள், கோள்கள் போன்றவற்றின் இயக்கங்களை உணர்ந்தவன் வான் இயல் விஞ்ஞானி; ஆன்மா, பரமாத்மா போன்ற விஷயங்களைப் பற்றி அறிந்து கொள்பவன் தத்துவ ஞானி; மெய்ஞானத்தை உணர்ந்த விஞ்ஞானி. பகுத்தறிவுக்கும் விஞ்ஞானத்திற்கும் அனுபவமே முடிவு. ஏட்டுப் படிப்பு மட்டும் முடிவாக ஆகாது. பகுத்தறிவு இயக்கம் என்ற பெயரால் நிகழ்த்தப்படும் செயல்கள் எல்லாம் வாதத்திற்காக ஏற்பட்டனவே தவிர, அனுபவத்திற்கும் முடிவுக்கும் உண்டானவை யல்ல.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

# டூ-இன்-ஒன்



போர்ஹென்ஸ் டபிள்–ஆக்ஷன் டூத்ப்ரஷ் உங்கள் பற்களை சுத்தம் செய்யும்போதே ஈறுகளையும் தேய்த்துக் கொடுக்கிறது.

பற்களை சுத்தம்
செய்யும்
உறுதியான
நீலக் குச்சங்கள்

ஈறுகளைத்
தேய்த்துக்
கொடுக்கும்
மென்மையான
வெள்ளைக்
குச்சங்கள்

**போர்ஹென்ஸ்**

டூ-இன்-ஒன்
டூத்ப்ரஷ்

அடல்ட்
மற்றும் ஜூனியர்

275 F-203 TAM

முழுநீள
நாவல்



# இங்கிலீஷ் படம் நிறையப் பார்த்தவள்!

புஷ்பா தங்கதுரை

சின்னஞ் சிறிய ஸ்டேஷனில் குட்டையான வேப்பமரத்தடியில் அவன் நின்றான். அவன் நினைப்புகள் வெகு வேகமாகப் பல திசைகளில் பறந்துகொண்டிருந்தன. பிளாட்பாரத்தில் ஈ, காக்காய் இல்லை. அவளை இறக்கி விட்ட நாலு பெட்டிப் புகை வண்டி நிறைய பிஸ்டன் சத்தங்களை உண்டாக்கிக் கொண்டு ஓடிவிட்டது.

அது அசல் கிராமாந்திரம்! சுற்றிலும் வெட்ட வெளியும் மரங்களுமாக இருந்தன. சற்று எட்டத்தில் ஒரு பாறைக் குன்று தெரிந்தது. சாயங்கால வெய்யிலில் அது பொன் தகடு வேய்ந்தது போல் இருந்தது.

ஸ்டேஷனிலிருந்து ஒரு கச்சாப் பாதை மர வரிசைகள் ஊடே போவதைப் பார்த்தாள்.

ஏறியும் இறங்கியும் அது சென்றது. எங்கே போயிற்று என்று தெரியாது.

நாகமலை என்ற அந்த ஸ்டேஷனுக்குரிய ஊர் எங்கிருக்கிறது என்று தெரியவில்லை.

இனிமேல் அவள் என்ன செய்ய?

ஒருவேளை மிஸ்டர் மகேந்திரன் வரவில்லையா? ஏன் வரவில்லை? அவருக்கு ஏதாவது நடந்திருக்கிறதா? ஒருவேளை வீட்டில் அத்தத் துக்கம் ஏற்பட்டிருக்குமா?

ஏதாவது காரணம் இருக்கும்! கையில் விலாசம் இருந்தது. விசாரித்துப் போனால் என்ன?

ஸ்டேஷன் கட்டடத்தை நோக்கி நடந்தாள். கட்டடம் சூன்யமாக இருந்தது. மனித அரவமே இல்லை. கிராதிக் கதவைத் திறந்து வெளியே வந்தாள்.

இடது பக்கத்தில் மூன்று குவார்ட்டர்ஸ் தெரிந்தன. ஒன்றுக்குள் வெள்ளை உடை போட்ட ஆசாமி நுழைந்து கொண்டிருந்தார். அவர்தான் எஸ். எம். ஆக இருக்க வேண்டும். இது ஒரு கிளை லைனில் உள்ள சின்னஞ் சிறு ஸ்டேஷன். யாரும் இறங்குவதோ, ஏறுவதோ அபூர்வம். ஒருவேளை எஸ். எம். அவளது ஒரே ஒரு டிக்கெட்டைப் பொருட்படுத்தியிருக்க மாட்டார்.

வெளியே வந்து சிறிது நேரம் நின்றாள். வண்டியோ, வாகனமோ ஏதுவும் இல்லை. கல் போட்ட குறுகிய சாலை சர்வ சூன்யமாக அவள் முன் நெளிந்து போயிற்று. நடந்து போகலாமா?

வெகு பக்கத்து குவாட்டர்ஸிலிருந்து ஒரு நடுத்தர வயதுக்காரர் வெளிப்பட்டார். அவர் அவளை விசித்திரமாகப் பார்க்க அவளும் பார்த்தாள். குறிப்போடு அவர் நெருங்கி வந்தார்.

—மலையங்குளம் எங்கிருக்கு? என்றாள் அவள்.

—மூணு மைல் போகணும்மா! என்றார் அவர்.

—ஆள் வரேன்னு சொல்லியிருந்தாங்க. வரலே. எப்படிப் போகணும்?

—அடடா! இங்கே வண்டி கூடக் கிடையாதேம்மா! இப்படி இந்த ரோட்டிலே ஒரு அரை மைல் நடந்தா ஊர் வரும். பஜார் வரும். ஆட்டோ இருக்கு. குதிரை வண்டி இருக்கு.

நடந்தாள்.

ஸவுண்ட் ஆஃப் மியூஸிக்கில் ஜூலி ஆன்ட்ரூஸ் இப்படித்தான் ஒரு ப்ரீஃப் கேஸோடு நடந்து போனாள். ஓ! அவளைப் போல் தனக்கும்....

நிறைய இங்கிலீஷ் படம் பார்ப்பவள் அவள். சக டீச்சர் சவிதா பண்ணி வைத்த உபயம் இது! முதலில் எதுவும் ரசிக்கவில்லை. பிறகு போகப் போக....

என்ன இங்கிலீஷ் சினிமா வந்தாலும் பார்த்து விடுவது என்று அவனும் சவிதாவும் கங்கணம் கட்டிக் கொண்டிருந்தார்கள். என்ன அழகாகப் படம் எடுக்கிறார்கள்! பயங்கரத்தை என்ன நேர்த்தியாக எடுக்கிறார்கள்! மயிர்கூச்செரிகிறது.

அவள் நடக்கும்போதே வால்ட்ஸ் கீதம் மிக மிருதுவாகக் கேட்டது. ஒரு தவிர்க்க முடியாத முறுவல் அவள் உதட்டில் ஏறிக் கொண்டது. நடையில் கூட ஒரு தாளம் வந்தது.

ஏன் மகேந்தர் வரவில்லை? ஒருவேளை வீட்டில் அது நடந்திருக்குமோ?

ஹூம்! இந்தக் கோடையை அவள் மறக்க முடியாது. அவள் வாழ்க்கையில் ஒரு புது வசந்த நாளைக் கொண்டு வந்தது. இல்லா



விட்டால் 'நடுநிலைப் பள்ளி ஆசிரியர் கோடை கேம்ப்'புக்கு அவள் வந்திருப்பாளா?

ஒரு வாரம் காம்ப்.

அரசு ஏற்பாடு செய்திருந்தது. ஐந்து பெரிய வீடுகளை அந்த மலை வாசஸ்தலத்தில் ஏற்பாடு செய்திருந்தது. அம்மா! என்ன குளிர்! ஏதோ மேல் நாட்டில் இருக்கிற மாதிரி இல்லை! அங்கு மட்டும் தமிழ் பேசாவிட்டால் நிச்சயம் ஸ்தலம் ஒரு அந்நிய நகரமாகத்தான் தோன்றும். யூகலிப்டஸ்கள், காப்பித் தோட்டங்கள், உருளைப் பயிர்கள், தேடிய தேக்குகள்... பொட்டானிகல் தோட்டங்கள்...

மகேந்திரன்தான் உருளைக் கிழங்கு சப்ளையராக இருந்தான். பெரிய தாற்காலிக காண்மடன். தினம் உருளைக் கிழங்கு மயந்

தான். அவள் கூட ஒரு சற்றுப் பருத்து விட்டாள்.

தனது வாழ்க்கை முறையைப்பத்து ஆசிரிய ஆசிரியைகளுக்குச் சொல்லிக் கொண்டிருக்கும்போதுதான் அவள் அவனைப் பார்த்தாள். நாற்பது இருக்கும். தலையை அழகாக வாரி இருந்தான். கழுத்தில் ஒரு மஃப்ளர் தொங்கியது. வார்த்தைகள் என்ன சரளமாக வந்தன!

—இதெல்லாம் ஜெர்மன் முறையிலே பயிராகுது! அவங்களே இங்கே வந்து தங்கிச் சொல்லிக் கொடுத்தாங்க.

—நம்ம ஊர் அவங்களுக்குப் பிடிச்சிருக்கா?

—ஓ! ரொம்பப் பிடிச்சுப் போச்சு! சிலவங்க இங்கேயே கல்யாணம் கட்டிக்கிட்டாங்க! மிஸ் உங்களுக்கு என்ன வேணும்? தைரியமாக் கேளுங்க!



முழுநீள நாவல்

அப்போதுதான் அவன் எழுந்திருந்தான்.
—நீலகிரித் தைலம் எப்படித் தயாரிக்கிறாங்க?
—அதுவா! உங்களுக்குப் பார்க்கணுமா? ஏற்பாடு பண்ணிஞல் போச்சு! ரொம்ப சனி!...

தைலம் தயாரிக்கும் கூடத்துக்கு அவளோடு போனபோது...

பல ஆசிரிய ஆசிரியைகளும் வந்தார்கள். மிஸ் நட்சத்திரவதியும் வந்தாள்! பெயரைப் பார் பெயரை! நட்சத்திரந்தான்! சனியன் போல அவனையே சுற்றிக் கொண்டு, வழி நெடுக மூக்கைச் சிந்திக் கொண்டு...

இரண்டு பேருக்கும் ஒரே முப்பத்தைந்து வயதுதானே? அதற்குள் எவ்வளவு கிழமாகப் போய்விட்டாள்! பூரன்கூட நாலுக்காகப் பண்ணிக்கத் தெரிகிறதா?...

இந்த நட்சத்திரவதி அவளை 'தமா தமா' என்று செல்லப் பெயர் சொல்லி அழைப்பது கூட அவனுக்குப் பிடிக்கவில்லை. (தமயந்தி முழுப் பெயர்) எப்படி இவளை வெட்டி விடலாம் என்றே அடிக்கடி நினைத்தான்!

தொழிற் கூடம் போனவுடன் மெதுவாக அவள் அவனோடு சேர்ந்து கொண்டாள். கேள்வி கேட்கிற பாவனையில்! நட்சத்திர வதிக்கு அசடு வழிந்தது.

அவனும் அவளைப் பார்த்தே பதில் சொன்னான். வேறு யாரையும் பார்க்கவில்லை.

தமா அவனை ஓரிரு முறை பரிசோதித்தாள்.
மற்றவர்களின் இடுக்கில் போய் நின்று கொண்டாள். அவனும் விடவில்லை. தேடித் தேடிப் பார்த்து அவளைக் கண்டு பிடித்தான். ஒரு முறை மிஸஸ் யசோதா தோள் வழியாக மறு முறை மிஸ் இலபெல்லா கழுத்து வழியாக.

அவள் கண்களில் என்ன அமரிக்கை! என்ன விசுவாசம்!

தொழிற் கூடம் பார்த்துத் திரும்பும் போது —மிஸ்! என்று அழைத்தான் அவன்.
—என் பெயர் தமா! தமயந்தி முழுப் பெயர்! என்ருள் அவள்.
—மிஸ் தமயந்தி! உங்களுக்கு மோதிரம் வேண்டாமா? என்று கையைத் திறந்து காட்டினான் அவன்.

டில்லியில் செங்கோட்டைக்கு எதிரே உள்ள ஜெயின் கோயிலில் திகம்பர ஜெயின் டிரஸ்ட் சார்பில் பறவைகளுக்காக ஒரு தர்ம மருத்துவமனை நடத்தப் பட்டு வருகிறது.

—ம. தே.



அவனது உள்ளங்கையில் அவனது எமரல்ட் மோதிரம் இருந்தது. பரம்பரைச் சொத்து! கொஞ்சம் பெரிசு. தொள தொள என்று இருக்கும். சமயங்களில் விரலை விட்டு விழுந்து விடும்! நூலைக் கட்டிப் போட்டுக் கொள்வான் அவன். ஆனல் ஊர் வந்திருக்கும்போது அந்த அநாகரிகத்தைச் செய்ய விரும்பவில்லை.

—எங்கே விழுந்திருந்தது?
—மேஜை மேலே பூகவிப்டஸ் லாம்பின் பார்த்திங்களே! அப்போ... நான் வச்சுக்க லாமா தமா?

'தமா' என்று அழைத்தது அவனுக்கு எவ்வளவு பிடித்தது! அவள் சிரிக்க, அவன் சிரிக்க, அவன் அந்த மோதிரத்தைத் திருப்பிக் கொடுத்தான்.

இரவில் ஆச்சரியம்! அவள் கண்கள் அவனைச் சுற்றி மிதந்தன. கூடவே ஜான் லெனன் பாட்டும் மிதந்தது.

Love, Love me do,
You know I love you!

அவனால் அந்த அதிசயங்களை மறக்கவே முடியாது.

பிறகு....

ஆமாம்... ஒரு நாள் பொட்டானிகலில் மற்றவர்களைப் பிரிந்து, அவனும் அவளும் அந்த க்ரீன் ஹவுஸுக்குள் போய்ச் செடிகளைப் பார்த்துவிட்டுத் திரும்பும்போது...
—தமா நீ ஜாக்கிரதையா இருக்கணும்!

நட்சத்திரம் கொஞ்சம் கண்டிப்பாகப் பேசியது.
—ஏன், என்ன? என்று அவள் துருவிக் கேட்டதற்கு.

எல்லோரிடமும் வெகுளியாய்ப் பழகாதே! என்று என்ன சாதுரியமாகச் சொன்னுள்!

அவனுக்கு என்ன ஆத்திரம் வந்தது! 'நீ கிழவி ஆயிட்டே! உனக்கு எல்லாம் வேணும். நான் அப்படி இருக்க முடியாது' என்று சொல்ல வேண்டும் போல் இருந்தது.

அதற்குப் பதிலாக,
—எனக்குத் தெரியும்! என்று ஒரே ஒரு படக் வார்த்தையைச் சொன்னுள்!

நட்சத்திரம் எப்படிச் சிவந்து விட்டாள். ஏற்கனவே முகம் கோணல். இப்போ சர்வ கோணலாகக் கோணினுள். கூட ஒரு பங்கு வழி நெடுக மூக்குச் சிந்திக்கொண்டே வந்தாள்.

பிறகு... பிறகு.... அந்தக் கடைசி சனிக்கிழமையில் அவள் விடைபெற்ற போது, —ஏன் திங்கட் கிழமை வரை இருக்க மாட்டீங்களா? என்று அவன் ஆதங்கத்தோடு கேட்டபோது.

—ஊர்ல அக்கா உடம்பு சரியில்லேன்னு செய்தி வந்திருக்கு. பிரதர்! நான் போக

னும். ரெண்டு நாள் சப்ளையைச் சேர்த்துப் பண்ணியாச்சு! ஊர் பக்கத்திலேதான்..... இப்படிக் கோயமுத்தூர் வந்திங்கன்னு. அங்கேயிருந்து....

—நான் உங்க ஊருக்கு வரலாமா?

அவளை மீறி அந்தக் கேள்வி எப்படி வெளியே குதித்தது? அவளுக்கே வெட்கமாக இருந்தது.

அவன் அவளை ஒரு பார்வை பார்த்தான். நீண்ட நெடு நேரப் பார்வை. அவளும் அவனையே பார்த்தாள். அவளது பார்வை ஓர் ஆட்டுக் குட்டி போல் சாதுவாக அவன் கையில் புரள நினைக்கும் பார்வை! மூப்பத்தைந்து வயதில் அந்தச் சொர்க்க அனுபவம் அவளுக்கு ஏற்படுகிறது! ஹூம்! நட்சத்திரம் வயிறு எரிந்து சாகட்டும்...

காம்ப் இங்கட் இழவை முடித்தபோது அவன் எல்லோர் கூட்டத்துடனும் சேரவில்லை. —இங்கே சொந்தக்காரங்க இருக்காங்க. போறேன்! என்று சொல்லிவிட்டு, நட்சத்திரத்திடம் வேண்டுமென்றே விடை பெறாமல் கிளம்பி விட்டான்!

இப்போது இந்த அஸ்தமன வேளையில் இந்த ஸ்டேஷனிலிருந்து செல்லும் பாதையில், மூன்று பர்லாங் போன பிறகு, ஏன் அந்த நட்சத்திரத்தின் நினைவு முந்திரிக் கொட்டை போல வருகிறது?

தங்க பிரேம் கண்ணாடிக்குள் கண்ணைக் கொடூரமாக வைத்துக் கொண்டு, —தமா! யாரையும் நம்பாதே! என்று எச்சரித்துக் கொண்டிருந்தாள்.

'நம்பினால்தான் வாழலாம் போ!' என்று சொல்லிக் கொண்டாள் அவள். அவள் நம்பிக்கை போல நாகமலை ஊரும் தெரிந்து விட்டது. அவளுக்குத் தைரியம் பிறந்தது.

பாட்டை நேராக ஊர் பஜாரிலேயே கொண்டு விட்டது. மினகாய் மண்டிரோ என்னவோ! நிறைய மிளகாய் அம்பாரங்கள் வழி நெடுக குவிந்திருந்தன. ஸ்டேஷன் ஆசாமி சொன்னது போல் ஆட்டோக்கள் பல இருந்தன. ஊருக்குள் உள்ள போக்குவரத்துக்காக அல்ல! சுற்றிவர நிறைய ஊர்கள் இரண்டு மைல், மூன்று மைல் தூரங்களில் இருந்தன. அவைகளுக்குப் போவதற்காக ஆட்டோக்கள் 'பேரப் பேச்சு' வாடகையில் கிடைத்துக் கொண்டிருந்தன.

—மலையங்குளம் போகணும்! என்றாள் அவள்.

—இருட்டிடுத்து அம்மா! ஏழு ரூபாய் கொடுங்க! என்றான் ஆட்டோக்காரன். வாலிபனாக இருந்தான். கட்டுமஸ்து சரீரம்! கையே பெரிய கனபரிமாணம்! இருந்தாலும் கண்ணில் அந்த விசுவாசக் களை நூறு சதவீதம் இருந்தது. வார்த்தை கூட என்ன மெதுவாகப் பேசினான்!

—குறைக்க மாட்டியா?

—நாலு இடத்திலே விசாரிச்சுக் கொடுங்கம்மா! எல்லாரும் இந்த வேளையிலே இந்த ரேட்லேதான் கேட்பாங்க!

ஏறினாள்.

முழுநீள
நாவல்

டொட்டட் டொர்ர் என்று கிளம்பியது. பஜார் அதன் வரிசையில்லா விளக்குகளோடு மறைந்தது. இடியென்று உலகம் முடிவுக்கு வந்தது போலிருந்தது. அவ்வளவு அந்தகாரம். எதுவும் கண்ணுக்குத் தெரியவில்லை. கிராமப்புறத்தில் இருட்டுக்கு என்ன அடர்த்தி! பனி போலக் கனமாக...

ரஸ்தா வெறும் கல் ரஸ்தாதான். ஆட்டோ குலுக்கும் இடுக்குமாகக் குதித்தது. அதன் மெல்லிய வெளிச்சம் நாலு அடிக்குத்தான் தெரிந்தது.

—மலையங்குளத்திலே, யார் வீட்டுக்கு அம்மா போறீங்க!

—குளத்துக்கு அப்பாலே இருபத்தெட்டாம் நம்பர் வீடு! தனி வீடா இருக்குமாம்.

அவன் பதில் பேசவில்லை.

அவனிடம் அதற்குள்ளே ஏன் சொன்னோம் என்று தோன்றியது. அந்த இருட்டில் அவளும் அவனும் தனியாகப் போவது அவளுக்கு எவ்வளவு அச்சமாக இருந்தது. இப்படித்தானே ஒரு இங்கிலீஷ் படத்திலே ஒரு பெண் தனியாக ஒருத்தன் காரிலே ஏறி... இங்கிலீஷ் படத்துக்குப் போவானேன்! இங்கே நம்ம ஊர்லே பில்லா ரங்கா கார்லே அந்தப் பெண்ணும் அந்தத் தம்பியும் ஏறி...

சீ, மகேந்திரன் இப்படி அவளைத் தவிக்க வைக்கலாமா? அவள் வருகிறாள் என்று அவனுக்கு நிச்சயம் தெரியும்... ஒரு வேளை அவன் அக்கா....அந்தத் துக்கம் நடந்திருக்குமோ?

இருந்தாலும் வந்திருக்கலாம். அல்லது யாரையாவது அனுப்பி யிருக்கலாம். ஒரு பெண் இப்படித் தனியாக...

எங்கள் வங்கியில் பணிபுரியும் ஒரு நண்பருக்கு 'மின்சாரம்' என்று பெயர். ஏன் இப்படி ஒரு பெயர் வைத்துக் கொண்டீர்கள் என்று கேட்டேன். சேலம் ஜில்லாவில் கொல்லிமலைச் சாரலில் வெள்ளாளப்பட்டி என்ற கிராமத்தில் இவர் பிறந்த அன்றுதான் மின்சாரம் வந்ததாம். அந்த ஞாபகார்த்தமாக அவருக்கு அந்தப் பெயர் வைத்தார்களாம்!

—கலாமூர்த்தி



முழுநீள நாவல்



ஏதாவது விளக்கு வருமா? பார்த்தாள். ஒரே அந்தகாரம்தான். மலையங்குளம் வருகிற வழியாக இல்லை. அது இருக்கிற திசை கூடத் தெரியவில்லை. ரஸ்தா வேறு நீண்டு முண்டுகளா! ஆட்டோ ரொம்ப மெதுவாகப் போனது. ஒருவேளை வேண்டுமென்றே...

ஜபித்துக் கொண்டு போனாள். அவளுக்கு ஆஞ்சநேயரைப் பிடிக்கும். ஆஞ்சநேயா, ஆஞ்சநேயா!

கண்களை மூடிக் கொண்டு ஜபித்தாள். எவ்வளவு நாழி ஜபித்தாள்? —அம்மா! வீடு வந்தாச்சு! சொன்ன பிறகு கண்ணை விழித்தாள்.

வண்டி ஒரு வேலி அமைப்பின் முன்னால் வட்டமடித்து நின்றது. கேட் ஒன்று மங்கலாகத் தெரிந்தது. அதில் இருபத்தெட்டு என்ற நம்பர் மட்டும் பளிச்சென்று...

இறங்கினாள். பத்து ரூபாய்க்குச் சில்லறை இல்லை. ஐந்து ரூபாய் நோட்டுக் கொடுத்து இரண்டு ரூபாய் சில்லறைகளைத் தேடினாள். நிறைய பத்துப் பைசா வந்தது. இரண்டு ரூபாய்க்கு அதிகமாக இருக்கும். அப்படியே கொத்தாக அவன் கையில் வைத்து —சந்தோஷமாகப் போ! என்றாள்.

அவன் பெரிய கும்பிடு போட்டான்.

அவள் கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே போனாள். சரல் பாதை. கட்டடம் மிக மங்கலாகத் தெரிந்தது. முகப்பில் ஏறிக் கதவைத் தட்டினாள்.

சிறிது நேரம் பொறுத்தே திறந்தது. மகேந்திரன் ஒருவேளை கட்டிக்கொள்ளலாம் என்று கூட எதிர்பார்த்தாள். ஆனால் மெல்லிய விளக்கு வெளிச்சத்தில் ஒரு கடுப்பான மகேந்திரனைத்தான் அவள் பார்க்க முடிந்தது.

அவளைப் பார்த்ததும் பார்வையில் துளி வித்தியாசமாவது வர வேண்டுமே! இல்லை! வெறும் 'குளிர்' பார்வையாக இருந்தது. —வா! என்றான்.

அதுகூட மொட்டையாக இருந்தது. மரியாதை இல்லை. ஓர் அன்னிய மனிதனைப் பார்க்கிறானா அவன்? இல்லை. நிச்சயம் இல்லை. மகேந்திரன்தான்.

வாயிலுக்குள் நுழைய, கதவை ஓங்கி மூடி டபீர் என்று அடித்தான். அவள் உடம்பு நடுங்கியது. சுற்றிலும் பார்த்தாள். விளக்கு ஏன் இவ்வளவு மந்தமாக இருந்தது? 'பவர்' போதாதா? 'சைகோ'வில் அந்தப் பெண் ஒரு ஹோட்டலில் நுழைந்தாளே அந்த ஹோட்டல் மாதிரி அல்லவா இருக்கிறது.

—ஏன் முழிக்கிறே? உள்ளே போயேன்! என்றான் அவன்.

அந்த வார்த்தை என்ன மொண்ணையாக இருந்தது? சற்றுகூட இதம் இல்லாமல், இங்கிதம் இல்லாமல், சிநேகிதம் இல்லாமல்

அவள் திரும்பிப் போக நினைத்தாள்.

அவள் கண்கள் பயத்தோடு நாலு பக்கமும் சுழல, ஒரு அசட்டுப் பெண் போல அங்கே நின்றாள்.

—ஏன் அங்கே நிற்கிறே? உள்ளே போ! என்றான் அவன்.

அவள் இதயம் அநேகமாக நின்றது. யார் இது? மகேந்திரா இப்படிப் பேசுகிறான்?

## அஞ்சலையின் அருமையான யோசனைகள்!

1. துடைப்பத்தால் பெருக்கும்போது யாரும் கவனித்துப் பார்த்தால் ஒழிய பீரோ, கட்டில், மேஜை அடியில் கூட்ட வேண்டியதில்லை.

2. துணி துவைக்கும் போது சோப் போடத் துணியில் நிறையத் தண்ணீர் தெளித்துக்கொண்டால் சீக்கிரம் சோப் கரைந்து விடும்... சிரமம் மிச்சம்.

3. துவைக்கும்போது சத்தம்தான் முக்கியம். அழுக்குப் போவது அவசியமில்லை.



4. துவைத்த துணியை நாமா கட்டிக் கொள்ளப் போகிறோம். ஆகையால் சோப் போக நன்றாக அலச வேண்டுமா என்ன?

5. பாத்திரம் தேய்க்கும்போது சாம்பலை அதிகம் வைத்துத் தேய்த்தால் கை எரியும். பாத்திரத்தை சும்மா தடவிக் கொடுத்துக் கழுவினால் போதும்.

6. தீபாவளி பொங்கல் சமயங்களில் பொறுத்துப் போவதே நல்லது. இல்லாவிட்டால் புதுப் புடவை எடுத்துத் தருவதைத் தவிர்க்கச் சில வீட்டுக்காரர்கள் அநாவசியச் சண்டை வளர்த்து நிப்பாட்டிவிடும் தந்திரத்தைக் கையாளலாம்.

7. புதிதாக வேலைக்குப் போகும் இடத்தில் ஒரு மாதம் நன்றாக வேலை செய்து விட்டுப் பிறகு படிப்படியாகக் குறைப்பதை விட ஆரம்பத்திலேயே கொஞ்சமாகச் செய்து காட்டி அதற்கு வீட்டுக்காரர்களைப் பழக்கி விடுவது உத்தமம்.

—என்.எஸ்.வி. குருமூர்த்தி

# அசல் க்ளூகோன்-டி ® ஒன்றே ஒன்று தான் உண்டு.

## அதனைத் தயாரிப்போர் க்ளாக்ஸோ.




மட்டமான போலிகள் பலவற்றுள், க்ளாக்ஸோ நிறுவனத் தயாரிப்பான அசல் க்ளுகோன்-டி யினை நீங்கள் வாங்குவது முக்கியம். இல்லையெனில், போலிகள் மூலம் உங்கள் குடும்ப உடல்நலத்திற்கே பேராபத்து வரலாம். க்ளாக்ஸோ நிறுவனத்தின், முற்றிலும் நம்பிக்கைக்குரிய தயாரிப்பாகும் க்ளுகோன்-டி; வைட்டமின் $D_1$, பாஸ்பரஸ், கால்ஷியம் ஆகியன செறிந்த தூய க்ளுகோஸ் பவுடர் அடங்கியது. தங்களுக்குத் தேவையான போது சக்திபெற லட்சக் கணக்கானோர் அருந்துவது இது.

க்ளுகோன்-டி தயாரிப்போர், க்ளாக்ஸோ — பலவகை உணவுப் பண்டங்களுக்கும், உயிர்காக்கும் மருந்துகளுக்கும் புகழ்பெற்ற நிறுவனம். வாங்கும் க்ளுகோன்-டி பேக்கெட் அசல்தானா எனப் பார்த்து வாங்குங்கள்.

**க்ளூகோன்-டி** ® சக்தியை மீட்டுத்தர நம்பகமானது.
**க்ளாக்ஸோ** நிறுவனம் அளிக்கிறது.

® டிரேடுமார்க்

HTB-GL-7027-TL

**முழுநீள நாவல்**

மிருது வார்த்தைகளைக் கொட்டி அவளை ஆகர்ஷித்த அதே மகேந்தரா?

ஒரு வேளை?.... களைப்பாக இருக்கிறாரோ? இருக்கலாம். குடும்பத்தில் எத்தனை தொல்லை இருக்குமோ? நான் சரியாகப் புரிந்து கொள்ளாமல் அவரை...

அவள் தானாக இயங்கி அடுத்த அறைக்குள் பிரவேசித்தாள்.

அதுவும் சின்ன ஹால். அங்கேயும் வெளிச்சம் பாதி பிரமையாக இருந்தது. நாற்காலிகளும் சோபாக்களும் பெரிய நிழல்களை உண்டு பண்ணின.

—அகிலி! அகிலி!

மகேந்தர் சொர சொரப்பாகக் கத்தினான்.

ஹாலில் ஒரு கதவு திறந்தது. ஒரு ஒல்லிக, வெட வெட தோற்றம், கிட்டத்தட்ட மறு உலக ஜீவன் போல் வெளிப்பட்டது.

அவள் மூச்சு நின்றது. பதற்றமான இதயத்துடன் உருவத்தைப் பார்த்தாள்.

அது ஒரு பெண்ணென்றுப் புரியபடலவிநாடிகள் ஆயின. வெள்ளை வெளேர் ஸாரி! முகத்தில் சருமம் உலர்ந்து எலும்புகள் தெரிந்தன. இரண்டு பூதாகாரக் கண்கள். நரைத்த தலையோடு தமாவை விநோதமாகப் பார்த்தாள்.

—அவள் வந்திருக்கா பாரு!

—பார்க்கிறேன்! என்றாள் அகிலி. புன்னகை ஒன்று கொடூரமாகப் பீச்ச, தமாவை ஏறிட்டுப் பார்த்தாள்.

—உட்கார்ந்துக்க!

தமா உட்கார்ந்தாள்.

அமெரிக்க ஜனாதிபதி திரு ரோனல்ட் ரீகனின் மனைவி திருமதிநான்ஸி ரீகன், அவருக்கு முன்னிருந்த அமெரிக்க 'முதன்மைப் பெண்மணி'களிடமிருந்து ஒரு விஷயத்தில் வித்தியாசப்பட்டவர். இவர் அமெரிக்க 'முதன்மை' மாற்றுத் தாயும் கூட. திரு ரீகன் ஏற்கனவே மணமாகி விவாகரத்து ஆனவர்.

தகவல்: ரிஸர்ச் அண்ட் ரெஃபரன்ஸ்



மகேந்தர் இப்போது உள்ளே வந்து உட்கார்ந்தான். அவளை அவன் ஏறிட்டுப் பார்க்கவில்லை. தலையைத் தாழ்த்தியிருந்தான்.

ஓ! இந்த மகேந்தர் என்ன வித்தியாசமாக இருக்கிறார்! அவர் முகம் கூடக் களைத்துப் போய், பழைய சோபையோ யௌவனமோ இல்லாது இருக்கிறதே! கொஞ்சம் கிழமாகவே தோன்றுகிறார். இவரையா?... அவள் சீக்கிரம் அந்த இடத்தை விட்டுக் கிளம்ப எண்ணினாள்.

நல்லா இருட்டி விட்டது. திரும்பிப் போக வாகனம் கிடைக்குமா?

அகிலி எழுந்து போய் ஒரு டம்ளர் பானம் கொண்டு வைத்தாள். —ம் சாப்பிடு! என்றாள்.

இரண்டாவது அதிர்ச்சி அவளுக்கு!

மரியாதை இல்லாமல் என்ன விரைப்பாகப் பேசுகிறாள்! அதை மகேந்திரனும் கேட்டு...

தமா தயங்கினாள். அகிலி மகேந்திரன் பக்கம் திரும்பி —ஏய், இந்தப் பொண்ணு ரொம்பப் பயப்படுது! என்றாள்.

—இல்லை! என்றாள் தமா. —எனக்கு இப்போ கோல்ட் பானம் பிடிக்காது!

இப்பவும் அகிலி சுமுகமாகப் பேசினால் தமாவும் பேசத் தயாராக இருந்தாள். அனாவசியமாய் ஏன் பயப்பட வேண்டும்?

ஆனால் அகிலி மேலே பேசாததுடன் மகேந்திரனை அர்த்தத்தோடு பார்த்துச் சைகை செய்தாள்.

எச்சரிக்கை! என்று குரல் கேட்டது. தமாவால் அதை அறிந்து கொள்ள முடிந்தது. அலையான்ஸ். ஃபிரான்ஸேஸில் பார்த்த பிரஞ்சுப் படத்தில் அந்த போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜேம்ஸ் இப்படித்தான் சொன்னார். சில உண்மைக் கேஸ்களைத் திரைப்படமாகக் காண்பித்து, பெண்கள் எப்படித் தற்காப்பு செய்து கொள்ள வேண்டும் என்று விவரித்தார்.

**நான் முன்னமே சொல்லியிருக்கிறேன்! இந்த மகேந்திரன் ஒரு ஜாலக்காரன்! வருஷா வருஷம் கூனூரில் நடக்கும் ஏதாவது மாநாட்டிலிருந்து ஒரு பெண்ணை அழைத்து வந்து விடுகிறான். வந்த பிறகு அவனும் அவன் அக்கா அகிலியுமாச் சேர்ந்து கொண்டு...**

—அவளுக்கு அப்போ பால் கொடு! என்றான் மகேந்திரன்.

—ஓ! சாப்பிடுவாளா? ஒரேயடியா பயந்து இருக்காளே!

—தோ! அவள் கட்டாயம் சாப்பிட்டாகணும்!

மகேந்திரன் கண்டிப்பாகப் பேசினான்.

**தெரிஞ்சுதா? என்றார் இன்ஸ்பெக்டர் ஜேம்ஸ்! இப்போ நீ எங்கே இருக்கே புரியுதா? ஒரு மோசமான இடத்திலே! இதிலேருந்து மீளறதுக்கு வழியில்லே! இந்த ஆசாமி கூனூரிலே உங்கிட்டே எவ்வளவு குழைவாப் பேசினான்! எவ்வளவு மிருதுவாக! தணிவாக! குழைவாக! நீ ஒரு பைத்தியம்! அவன் பேச்சைக் கேட்டு அப்படியே சொக்கிப் போயிட்டே! ஏமாந்து போய் இவ்வளவு தூரம்**

வந்திட்டே பாரு! ...அப்பவே எச்சரிக்கை சொன்னேனே கேட்டியா!

பால் வந்தது. அதை அவன் வாங்கிக் கொண்டான். சந்தேகம் எதுவும் கொள்ளாதவன் போல் முதல் சூட்டில் சூப்பினான். பால் புளித்த மாதிரி இருந்தது.

அகிலி எழுந்திருந்தாள். கப் போர்ட்டில் போய் ஒரு டம்ளரில் ஒரு பொன்னிறத் திரவத்தை ஊற்றி எடுத்து வந்தாள். அவன் முன்னால் உட்கார்ந்து ஒரு சூப்புச் சூப்பினாள்.

—பிராந்தியா? என்றான் அவன்.

—ஏன், சாப்பிடக் கூடாதா? நான் ஆஸ்துமாக்காரி! ஞாபகம் வச்சுக்க! அதுவும் இன்னிக்கு ராத்திரி நான்தானே காரியத்தை எல்லாம் முடிக்க வேண்டும்? நீ பேசவே தவிர காரியம்னு வந்தா ஒதுங்கி நின்னுடுவே!

**பார்த்தியா** என்றார் இன்ஸ்பெக்டர் ஜேம்ஸ். **'இன்னிக்கு ராத்திரி'ன்னு சொன்னதைக் குறிச்சுக்க! என்ன செய்வாங்க தெரியுமில்லே! உனக்குத்தான் சொல்லியிருக்கேனே. ஒரு பெரிய ட்ரம் தயார் பண்ணி வச்சிருப்பாங்க! நீதான் சினிமாவிலே பாத்திருப்பியே! ஒவ்வொரு மனைவியா ஒருத்தன் கொன்னானே! கொன்னு ஒவ்வொரு டிரம்முக்குள்ளே வச்சு! ... அடி பைத்தியக்காரி! எல்லாப் பணத்தோடும் ப்ரீஃப்கேஸ்கொண்டுவந்துட்டியா? இனி உன் கதி அதோ கதிதான்!**

—டிரம்மைக் கீழே கொண்டு வந்தாச்சா? அகிலி அவனைக் கேட்டாள்.

—கொண்டு வந்தாச்சு!

—தோட்டத்திலே இடம் இருக்கா பார்த்திட்டியா?




—ஓ! இருக்கே!

—ஒவ்வொரு மார்ச்சுக்கும் வரிசையாக் கிடைச்சது! இந்தத் தடவைதான் ஜூன் வரை இழுத்துடுத்து!

—ஐயோ! நான் ஆள் தேடிப் பிடிக்கிறதுக்கு உள்ளாற... எல்லாம் கும்மாளம் போடற கழுதைங்க! ஒன்று கூட லேசிலே வசப்படல்லே, சடை சிலே...

—தெரியுமே! உன் சிரிப்பைக் காட்டியிருப்பே! இல்லாக்காட்டி பட்லர் இங்கிலிஷ் பேசியிருப்பே! வசப் பட்டிருக்கும்! உனக்குன்னு சரியான வயசுலே வருஷா வருஷம் ஒவ்வொண்ணு மாட்டிக்குது.

மகேந்தர் ஓரேயடியாகச் சிரித்தான்.

—முப்பத்தைந்து வயசுதான் நம்பன்க்கு சரி அகிலி! அதுக்குத்தான் கல்யாணம் ஏகாத ஏக்கம் நிறைய இருக்கும். யாராவது கிடைப்பாளுன்னு பார்த்துக்கிட்டிருக்கும். கிடைச்சா வெளியிலே யாருக்கும் சொல்லாம ஓசைப்படாம வந்துறும். எப்படி?...

அகிலி சிரித்தாள். நீள நீள முன் பற்கள்.

**—நான் சொன்னேனில்லே!** என்றார் இன்ஸ்பெக்டர் ஜேம்ஸ்! — **இப்படித்தான் குற்றவாளிங்க இரக்கமில்லாம ஏமாத்துவாங்க! கொஞ்சம் கூடத் தாட்சண்யப்பட மாட்டாங்க! அவங்களுக்கு அகப்பட்டுக்காத**



மக்கா நகரில் ஓரிரவில் படுக்கை நேரம். நபியைக் கொலை செய்யும் நோக்கத்தோடு அவர்களின் வீட்டைச் சுற்றிப் பகைவர்கள் நிற்கின்றனர். நபி வெளியில் வந்து கைப்பிடி மண்ணை எடுத்து குர்ஆன் ஸ்லோகங்கள் ஓதி சூழ்ந்து கொண்டிருந்தவர்களை நோக்கி வீசி விட்டு அபூபக்கர் என்ற தோழரை அழைத்துக் கொண்டு மதீனா நகருக்கு விரைகிறார்.

மூன்றாவது மைலில் உள்ள ஒரு மலையின் குகையில் சென்று இராத் தங்குகின்றனர். பகலில் பகைவர் அம்மலைப் பிரதேசத்தைத் துழாவுகின்றனர். குகை அருகிலும் வந்து விட்டனர். மனங் கலங்கிய அபூபக்கர், ''இறை தூதரே, எதிரிகள் நம்மைச் சூழ்ந்து விட்டனரே நாமோ இருவர் மட்டிலும்தானே!'' என்று கலைப்படுகிறார். முஹம்மது நபியோ, ஒருசிறிதும் கலங்காது ''துன்பம் வேண்டாம், அபூபக்கரே! உறுதியாய் நம்முடன் இறைவனும் இருக்கிறான்!'' என்று தேற்றுகிறார். பின்பு நடந்தது என்ன? குகை வாசலில் எதையோ கண்ட பகைவர், 'குகைக்குள் மனிதர் யாரும் சமீபத்தில் நுழைந்திருக்கச் சாத்தியம் இல்லை' என்றுபேசிக் கொண்டு வேறிடத்துக்குச் சென்று தேடுகிறார்கள்.

அப்படி அவர்கள் எதைப் பார்த்தனர்? அவர்கள் தேட அங்கு வருமுன் விடிகாலையில் குகை வாயிலை அடைத்துச் சிலந்தி யொன்று வலை பின்னியிருந்தது; புறா ஒன்று கூடு கட்டி முட்டையிட்டிருந்தது.

''இறைவன் ஏற்படுத்திய பாதுகாப்பு உயிருக்குக்க வசத்தையும் கோட்டையையும் தேவையற்றதாக்கி விட்டது'' என்று கவிஞர் இமாம் பூஸிரி இது குறித்துப் பாடுகிறார்.

—லியாகத் அலி

முழு நீள

# நாவல்



வழி அத்துப்படி! பாரு! வருஷா வருஷம் கொல்ல பண்றாங்க! போன இரண்டாம் வருஷம் உனக்குத் தெரிஞ்ச ஆசிரியை ராமலட்சுமின்னு ஒருத்தி காணாமப் போனாளே, அதுவும்...

அகிலி எழுந்து சமையலறைக்குப்போனாள். 'எனக்கும் பசிக்குது' என்றான் மகேந்தர். 'ஊறுகாய் எடுத்துக்க' என்று அகிலி உள்ளிருந்து கத்தினாள். மகேந்தர் அலமாரிக்குப் போனான்.

— குவிக் தமா! அந்தப் பாலை எடுத்துச் சோபாவுக்கு அடியில் விடு! க்விக். டயம் இல்லே. விட்டுட்டியா! அப்புறம் வெறும் டம்ளரைச் சூப்பிற மாதிரி பாவனை காட்டு. உன் பீதியைக் காட்டாதே! அவங்க கிட்டே பேச்சுக் கொடு! பேச்சை வளர்த்திக் கிட்டே போ! உனக்கு இப்ப டயம்வேணும்...

உப்புமா தட்டோடு அகிலி வந்தாள். மகேந்தர் ஊறுகாயை வைத்தான். அவன் அவர்கள் இருவரையும் பார்த்துப் புன்னகையோடு டம்ளரைச் சூப்பினான்.

—பால் நல்லா இருச்சே! வீட்டிலே கறக்கிறாங்களா?

அகிலி ஆச்சரியமுடன் திரும்பினாள். தமாவின் புன்னகை மாறவில்லை.

—ஹா... ஸ்ஸ் என்று அகிலி இழுத்தாள். —வெளியிலே வாங்கறோம். உப்புமா சாப்டிறியா?

"தாத்தா நீ இங்கே இருக்கிறது எல்லோருக்கும் ரொம்ப பாரமா இருக்காம்!"

"அடப்பாவி யார்டா அப்படி சொன்னது. வந்தபோது இருந்த எடையை விட இப்போ ஐஞ்சு கிலோ குறைஞ்சுதான் இருக்கேன்னு சொல்லு."

-ஆர். பி. ராஜ்



—வேண்டாம்! பசியில்லே! மகேந்தர்! பொட்டானிகல் தோட்டம் பக்கம் நாம்ப பால் சாப்பிட்டது நினைவு இருக்கா?

முறுவலைப் பெரிதாக்கிக் கொண்டு கேட்டான்.

அவன் உப்புமாவை வாயில் திணித்துப் பெரிய கடைவாயுடன் அசைத்துக்கொண்டிருந்தான். கூறுரில் காட்டிய அந்த நாசுக்கெல்லாம் எங்கே? பார்க்கிற பார்வை பார்! கொடூரமா, வில்லன் மாதிரி... பேச மாட்டேங்கிறான். முறைக்கிறான்!

—மகேந்தர்! ஏன் பேச மாட்டேங்கிறீங்க?

— கரெக்ட்! அப்படிக்கேளு! தைரியமாக் கேளு. எதுக்கும் பயப்படாதே! தப்பிக்க ஒரு வழி வேணும்! யோசி! அநேகமாக நீ தூங்கினப்புறம்தான் உன்னைக் குளோஸ் பண்ணுவாங்க. அதுக்காக பாலிலே மயக்க மருந்து போட்டிருப்பாங்க! பெட்ரூமுக்குப் போ! தப்புறதுக்கு வழி அங்கே இருக்கா பாரு!ஏதாவது சன்னல்,வெண்டிலேட்டர்..

—எனக்குத் தூக்கம் வருது!

அவன் எழுந்தான். மகேந்தர் பாதி உப்புமாக் கையை அப்படியே உதறினான். —அகிலி அவனுக்குத் தூக்கம் வருது!

அகிலி சமையலறைக்குப் போயிருந்தாள். இன்னொரு அம்பாரம் உப்புமா கொணர்ந்தாள். அவளது நீளக் கைக்குள் உப்புமா கொத்தாக மாட்டிக் கொண்டு நந்து போல் நலித்தது.

—தமா, அந்தக் கையை வைச்சுத்தான் உன் கழுத்தை நெரிப்பா! பார்த்துக்கோ!

—அந்த ரூம்பா இருக்கு பாரு! அதுதான் பெட் ரூம். போறியா?

அகிலி அன்போடு சொன்னாள்.

தமா உடனே போகவில்லை. எழுந்து நின்றான். சோம்பல் முறித்தான். அகிலியையும் மகேந்திரனையும் ஒரு பார்வை பார்த்தான். மகேந்திரன் கண் இடுக்கிட்டது.

—சபாஷ் 'வெல்டன்'தைரியத்தைக்காட்டு!

—உங்க பெட்ரூம் சரியில்லேன்னு நான் ஸ்டேஷன் போயிடப் போறேன். வாசல்லே வண்டியைக் காத்துக்கிட்டு இருக்கச் சொல்லி இருக்கேன். ராத்திரி பூரா இருப்பான்.

—பலே, பலே! பிரமாதம்!

தமா உடனே சாடி, சன்னலுக்குப் போய் வெளியே பார்த்தான். வெளியில் வாகனம் இருக்காது என்று தெரியும். வேறு யாராவது தென்பட மாட்டார்களா? கூச்சல் போடலாமே!

—அகிலி! அகிலி! அவனைப் பிடி! பிடி! என்று உப்புமாவோடு மகேந்தர் கொழகொழத்தான்.

அகிலி அம்பாரத்தைக் கீழே போட்டாள். காலைக் கப்பை விரித்து ஒரு விருட்டில் தமாவின் முதுகில் இருந்தாள்.

—ஐயோ! கொல்றாங்க! உதவிக்கு வாங்கோ! வாங்கோ! கொலே! வாங்கோ!

குரல் உச்சத்தில் தமா கத்தினான். இருட்டுக்குள் அத்தனை கூச்சல்களும் சொறுனை வெறும் சகதியில் எறிந்த கல் போல!

—நோ, நோ, நோ! அது வழி அல்ல!




**யாரும் உன் கூச்சலைக் கேட்க மாட்டாங்க! வீட்டை விட்டு ஓடப் பாரு!**

அலிலி அவளைச் சோளியோடு பிடிக்க, தமா படக்கென்று திரும்பித் துணியைக் கிழித்து வாசலை நோக்கி ஓடினாள்.

**—அங்கே இல்லே. பின்னாலே போ! அங்கேதான் வழி!**

அவளுக்குப் பாதி பீதி! பாதி தைரியம்!

வாசல் கதவு உள் பக்கம் இறுக்கமாகப் பூட்டியிருக்கப் பின்புறம் திரும்பினாள்.

மகேந்திரன் எழுந்தான். அவன் தன் ஓட்டத்தில் பிராந்தி தெரிந்தது —பீதி! பீதி!

பெட்ரூம் பக்கம் ஒரு சாடு! ஐயோ! ஐயோ! என்று ஒரு கூச்சல்! கூச்சல்கள் ஒவ்வொன்றும் அவள் வாயிலிருந்து பறவைக் கொத்துகள் போல விறி ஓடின. வீடு முழுதும் இறக்கை அடித்தன.

**—பெட் ரூம்லே வழியில்லே! சமையலறையைப் பாரு! பின்னால்போக வழி இருக்கா பாரு! வழி இருக்கணும்.**

சமையல் அறைக்குத் திரும்பினாள். எதிரே அலிலி கையைப் பரத்திப் பிசாசாக வழி மறித்தான்.

**தமா! என்.வி.வி. டிரெயினில் இருக்கில்லே!.. நீ வளையத்துக்குள்ளே தலையை விட்டுப் பாய்வியே! அதுபோல அவன் வயிற்றில் பாய்! வெறும் சோளி அவள்!**

—ஏ, பிசாசு!

தமா ஒரு கூப்பாடு போட்டு, தலையை சட்டி முனையாக்கி, அலிலி வயிற்றில் பாய்ந்தாள்.

பளீர் என்று சத்தம். அலிலி தோல் அதிர்ந்தது. உள்ளே அத்தனை அண்டங்களும் கிடுகிடுக்க, —அம்மா! என்று கத்தினான்.

தமா அவனை உதறிவிட்டு சமையலறைக்கு ஓட, எங்கே கதவு? எங்கே கதவு? பெரிய பெட்டியை வைத்து மறைத்திருக்கிறார்களே! நகட்ட முடியுமா?

**— விடாதே நகட்டிப்பார்!**

வாசல் பக்கம் அப்போது ஹாரன் ஒலி! அது ஒரு நாராசமாக ஒலிக்க, மகேந்திரன் தமாவைப் பின்பற்றுவதை நிறுத்தி வாசல் பக்கம் திரும்பினான்.

ஒரு கணம் யோசித்து, சட்டென்று கதவைத் திறந்து வெளிப் பக்கம் வந்து தாழ்ப்பாள் போட்டுக் கொண்டான்.

முதலில், இருட்டில் எதுவும் தெரியவில்லை. பிறகு அந்த ஆட்டோ மெதுவாகப் புலனாயிற்று. விரைவாக நடந்து அணுகினான்.

...கொஞ்ச நாழி முன்னாலே அம்மாவை இறக்கினேனே! அவங்க சில்லறை தந்தப்ப, ஒரு மோதிரத்தையும் தந்துட்டாங்க. கைவிலே நழுந்து விழுந்துடுத்துன்னு நினைக்கிறேன். அம்மா கவலைப்படப் போறாங்களேன்னு கொண்டாந்தேன்!

ஆட்டோக்காரன் சொல்ல, —ரொம்ப நன்றி! அவங்க கிட்டக் கொடுத்திடறேன். என்னிட்டியே கொடுக்கலாம். பரவாயில்லே.

அவன் வாங்கிக் கொள்ள, ஆட்டோக்காரன் வண்டியைக் கிளப்ப,

திடீரென்று தமா வியர்க்க விறுவிறுக்கப் பின்புறம் தாவி ஏறினாள்.

மகேந்திரன் அதைக் கண்டு —ஏ! இறங்கு! என்று இரைய,

—டிரைவர் விடு வண்டியை! என்று தமா இரைய

வண்டி பக்கத்தில் வேகமாக வந்த மகேந்திரனை, ஆட்டோக்காரன் ஒரு தள்ளுத் தள்ளினான். அது ஒரு உடனடி உணர்ச்சி!

ஏதோ தப்பிதம் நடந்திருக்கிறது என்று உள் மனம் சொல்லி விட்டது.

—போ! போ! டிரைவர்! அவன் ஒரு கொலை பாதகன்! என்று சொல்ல

டிரைவர் தன் வஸ்தாத் உடம்பில் இரு கைகளையும் இடுப்பில் வைத்து 'ஹாம்' என்று ஒரு ஹுங்கார மூச்சை, 'நீ புல் மாதிரிடா அப்பம்!' என்கிற அர்த்தத்தில் உதிர விட்டு, ஆட்டோவுக்குள் ஏறி உட்கார்ந்தான்.

ஆட்டோ கிளம்பி, மெதுவாக மேட்டில் ஏறி, இருட்டுக்குள் புதைந்து கொண்டே போக,

தமா மெள்ள மெள்ள ஆசுவாசம் அடைந்து கொண்டிருந்தாள்.

---

கருங்கலுக்கும் தொடுவெட்டிக்கும் இடையே உள்ள ஒரு ஊரின் பெயர் நட்டாலம். இங்கு ஓர் இளம் பெண் சிறிய ஒரு பெட்டிக்கடை வைத்துள்ளாள். இந்தப் பெட்டிக் கடையின் மூலதனம் சுமார் ரூ. 100. 'அந்தப் பெண்ணை எங்கோ பார்த்த ஞாபகம் உள்ளதே!' என நான் யோசித்தேன். பளிச்சென ஞாபகம் வந்தது. இவள் பிச்சைக்காரி அல்லவா!

விசாரித்ததில் அவள் கூறியது:

''நான் பிச்சை எடுத்து 100 ரூபாய் சேர்த்து இந்தப் பெட்டிக் கடையைத் துவங்கியுள்ளேன். எனக்கு யாராவது 500 ரூபாய் கடன் தந்தால் கடையை விரிவு படுத்தலாம்.''

இவள் உண்மையிலேயே மற்றப் பிச்சைக்காரிகளுக்கு ஓர் எடுத்துக்காட்டுத் தானே!

—கருங்கல் ஆர். ஜார்ஜ்



# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!



நைஸில்
உபயோகிப்பீர்-
மிகத்துரித நிவாரணம்
அளிக்கும்
வியர்க்குரு
பவுடர.






2
பேக்குகளில்—
'ப்ளூ' மற்றும்
'ஸாண்டல்வுட்'

வாங்குவீர் நைஸில்.
விரட்டுவீர்
வியர்க்குருவை.
பால்கம் பவுடரைவிட
குறைந்த விலையில்!



மருந்துக் கலவை
யுள்ள நைஸில்:

1. அதிக வியர்வை யைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற் படுத்தும் கிருமி களை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இத மளிக்கிறது.

GN-79-PR-TH

# 'ஸ்விங் பால்' சாம்பியன் யார்?

ஜப்பானிலிருந்து வரவழைக்கப்பட்ட 'ஸ்விங் பால்' கருவி அங்கே ரொம்ப பாப்புலர். நூலில் தொங்கும் பந்தை, கைப்பிடியைப் பிடித்தபடி, லாகவமாகத் தூக்கிப்போட்டு, குழிவான பகுதியில் பிடிக்க வேண்டும். இப்படிச் செய்தால் ஒரு பாயிண்ட். அப்படியே பந்தை மேலே தூக்கிப்போட்டு, மீண்டும் பிடித்தால் ஒரு பாயிண்ட். இன்னொருதரம் போட்டுப் பிடித்தால் மேலும் ஒரு பாயிண்ட் போனஸ். இப்படி....

இந்த ஸ்விங்பாலே, நம் ஊர் நகைச்சுவை நடிக நடிகையர் ஒரு சிலரிடம் கொடுத்து, எத்தனை பாயிண்ட்டுகள் எடுக்கிறார்கள் என்று பார்த்தபோது: (ஒவ்வொருவருக்கும் 5 சான்ஸ் தரப்பட்டது.)

**அனுமந்து:**— 'முதலில் கொஞ்ச நேரம் பிராக்டிகல் பண்ணிப் பார்த்துக்கொள்கிறேன்' என்றார். ஒப்புக் கொண்டோம். பலமுறை போட்டுப் பார்த்தார். ''ஓ.கே. ரெடி'' என்றார். முதல், இரண்டாவது முயற்சிகளில் தோல்வி. மூன்றாவது தடவை பிடித்து விட்டார். நான்காம் முறை தோல்வி. ஐந்தாவது தடவை பிடித்து விட்டார். மொத்தம் இரண்டு பாயிண்ட். ''40 சதம் நான் பாஸ் பண்ணிவிட்டேன்'' என்றார் பூரிப்புடன்.







**குண்டுகல்யாணம்:**— உற்சாகமாய் போட்டிக்குத் தயாரானார். ''என்னால் பாயிண்ட் எடுக்க முடியுமா என்று சந்தேகம்தான். ஆனாலும் முயற்சி செய்கிறேன். முதலில் டிரயல்'' என்றார். டிரயல் முடிந்தது. 'ரெடி' சொல்லிவிட்டு முயற்சி செய்தார். ஆனால் பாவம்! ஒரு தடவை கூடப் பிடிக்கவில்லை. பரிதாபமாய்ப் பார்த்தார். ''சார்! எடுத்து வைத்துக் கொண்டு விடுகிறேனே!'' என்று சொல்லி எடுத்து வைத்துக்கொண்டு ஸீரியஸாகவே போட்டிருந்தால் அடையும் மதிப்பெண்ணை விட ஒருபடி அதிகமாகவே போட்டோவுக்காக போஸ் கொடுத்தார். 'இளிக்'. ''தேங்க் யூ.''



**லூஸ்மோகன்:**— ''இது என்னுங்க?'' என்றார். விஷயத்தை விளக்கியதும், ''இதெல்லாம் சின்ன புள்ளேங்க வெளையாட்டுங்க. டில்லி தாண்டு மாதிரி. தாங்க. நான் ஈஸியா போட்டுப் பிடிச்சுடுவேனே!'' என்றார். ''அப்படீங்களா? சந்தோஷம் முயற்சி செய்யுங்களேன்'' என்று கொடுத்தோம். 'ஒரு நிமிஷம்' என்று சொல்லிவிட்டு உள்ளே போய், வேஷ்டி, சட்டையிலிருந்து, டிராயர், டீ ஷர்ட்டுக்கு மாறினார். ''இது தான் வசதி'' என்றார். ஸ்விங் பாலை வாங்கி சில முறைகள் ரிகர்ஸல் பார்த்துக் கொண்டு, ''சரி எண்ணிக்குங்க'' என்று சொல்லி ஐந்து தடவை முயன்றார். பாவம்! ஒரு தடவை கூடப் போடவில்லை. ''டச் விட்டுப் போச்சு'' என்றார்.



**மனோரமா:**— ''என்னது இது?'' என்று தமக்கே உரிய குரலில் நீட்டி முழக்கியபடி கேட்க, விஷயத்தை விளக்கினோம். ''இது நல்லாவே இருக்குதே!'' என்று வியந்தபடி, ''சும்மானுச்சும் கொஞ்சம் போட்டுப் பாத்துக்கறேனே?'' என்றார். ''சரி'' என்றதும் கொஞ்ச நேரம் பிராக்டீஸ் செய்தார். ''இது என்ன இம்மா கஷ்டமா இருக்குது?'' என்று சொல்லிவிட்டு, ''சரி எண்ணிக்கறீங்களா?'' என்று ஆரம்பித்தார். முதல் தடவை வெற்றி. இரண்டாவது தடவையும் வெற்றி. அடுத்து இரண்டு தடவை தோல்வி, கடைசிதடவை வெற்றி. மனோரமாவுக்கு மூணுபாயிண்ட். ''பரவாயில்லேயே! மூணு தடவை பிடிச்சுட்டேனே!'' என்று பெருமையாய்ச் சொல்லிக் கொண்டார்.



''இது நல்லாத்தான் ...னக்கு இதெல்லாம் ...ர். ''பரவாயில்லே. ...பாருங்க. எல்லாம் சும்மா ...க்குத்தானே!'' என்று ...' என்று வாங்கிக் கொண் ...பாயிண்ட் கூட எடுக்காட்டி ... என்று சொல்லியபடி ஐந்து ...முயற்சி செய்து, எப்படியாவது ...ட்டாவது எடுத்து விடுவதில் ...வம் காட்டினார். ஆனாலும் சே! ...துதான் ஒரு தடவை கூட ஒத்து ...மறந்து விட்டது!



**காத்தாடி:**— 'ஸ்விங் பாலை' பார்த்ததும், ''இதுபற்றி நான் ஏற்கெனவே கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் டிரை பண்ணின இல்லை'' என்று சொல்லிவிட்டுக் கொஞ்ச நேரம் பிராக்டீஸ் பண்ணிவிட்டு, ''ஷல் வி ஸ்டார்ட்?'' என்று கேட்டார். ''ஓ.கே.'' என்றதும், ''எண்ணிக் கொள்ளுங்கள்'' என்றார். முதல் தடவை தோல்வி. அடுத்த தடவை பிடித்து விட்டார். அப்படியே மேலே போட்டு இன்னொரு தடவை பிடித்து ஒரு போனஸ் பாயிண்ட்டையும் தட்டிக் கொண்டு போய் விட்டார். மூன்றாவது தடவை ஒரு பாயிண்ட். நாலாவது தடவை தோல்வி. ஐந்தாவது தடவை ஒரு பாயிண்ட், பிளஸ் ஒரு போனஸ் பாயிண்ட். மொத்தம் 5 பாயிண்டுகள். ஆக இந்தப் போட்டியில் சாம்பியன் காத்தாடி ராமமூர்த்திதான். கங்கிராட்ஸ் மிஸ்டர் காத்தாடி!

ஸ்விங்பால் உதவி: நடேஸ். கே. மூர்த்தி
தொகுப்பு: சந்திரமௌலி
புகைப்படங்கள்: கேதார்நாத், ஸ்பைடர்மேன், சுபா

# சிக்கல் சிங்காரவேலர்

ஆனந்தி





✕ சிக்கல் சிங்காரவேலவர்

"சிங்காரவேலவன் வந்தான்" என்ற ஆனந்த பைரவிப் பாடலை மனம் கசியப் பாடக் கேட்டவர்கள் அந்தச் சிங்காரவேலனைக் கண்டு மகிழ வேண்டும் என்று ஆசைப் படாமல் இருக்க முடியாது.

திருச்சிக்கல் தலத்தில் சிவபெருமானும் தேவியும் தம்முடைய அருந்தவப் புதல்வனின் அழகு வடிவத்தையும், பராக்கிரமத்தையும் கண்டு பூரித்துப் போய் வீற்றிருக்கிறார்கள். பிள்ளைப் பெருமை யாருக்குத்தான் இல்லை? முருகப் பெருமானின் மாமனும் மாமியும் அருகிலேயே நின்று மருகனின் லீலைகளைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

மாமனும் மருகனும் உடன் உறையும் தலங்கள் நான்கில் இது ஒன்று என்று அறிகிறோம்.

சிக்கல் என்ற பெயர் வந்ததற்குக்காரணம் தெரிய வேண்டுமானால் தல புராணத்தைப் பார்க்க வேண்டும்.

காவேரிக் கரையில் உள்ள இந்த இடம் மல்லிகை வனமாகத் திகழ்ந்தது. சிவ பெருமானைத் தியானித்துத் தவம் புரிய வசிஷ்ட முனிவர் இந்த இடத்தைத் தேர்ந் தெடுத்து ஆசிரமத்தை அமைத்துக் கொண் டார். கொடிய பஞ்சம் ஏற்பட்டபோது பசி தாள முடியாமல் காமதேனு மாமிசத் தைப் புசித்து விட்டது. அந்தப் பாவத் தினால் ஈசுவர சாபம் ஏற்பட்டுப் புலி முகத் துடன் திரிந்து கொண்டிருந்தது. வசிஷ்ட மகரிஷியைத் தேடி அது வந்திருக்க வேண் டும். மல்லிகை வனத்துக்கு வந்ததும் அங்கிருந்த அமிர்த தீர்த்தத்தில் முழுகி சிவபெருமானை வழிபடவே புலி முகம் மறைந்து சுய முகம் தோன்றிவிட்டது. சாப விமோசனம் பெற்ற ஆனந்த பரவசத் தில் மெய் மறந்து அப்படியே பால் சொரிந் தது. அமுத தீர்த்தம் பால் குளமாகி விட்டது. வசிஷ்ட முனிவர் தம் மகளைப் போல் அன்பு செலுத்திய காமதேனுவின் சாபம் நீங்கியபடியால் மனம் மகிழ்ந்தார். பால் குளத்தில் திரண்ட வெண்ணெயை எடுத்து அப்படியே லிங்க வடிவமாகப் பிடித் தார். பூஜை முடிந்த பிறகு தம்முடன் எடுத்துப் போக எண்ணினார். சிவலிங்கத்தை அசைக்க முடியவில்லை. வெண்ணெயானது கல் போலச் சிக்கிக் கொண்டது. அதனால் "சிக்கல்" என்ற பெயர் வந்ததாம். வெண் ணெய்ப் பிரான் தம்மிடம் அன்பு செய் பவர்கள் பிடியில் சிக்கிக்கொள்பவர் என்றும் வைத்துக் கொள்ளலாம்.

வைஷ்ணவர்கள் இன்னொரு கதை கூறு கிறார்கள். மகாபலிச் சக்கரவர்த்தி இந்திர பதவி அடையாமல் தடுக்க வேண்டுமென்று திருமாலிடம் வேண்டினார்கள். திருமால் மல்லிகை வனத்துக்கு வந்து சுயா தீர்த்தம் உண்டுபண்ணி சிவபெருமானை வழிபட எண் ணினார். வசிஷ்ட முனிவர் வெண்ணெயால் லிங்கம் பிடித்துக் கொண்டிருந்தாரல்லவா? அந்தச் சமயத்தில் குழந்தையாக வந்து வெண்ணெயைப் பிடுங்கிக் கொண்டார். வசிஷ்டர் கோபமடையாமல் "யாரப்பா நீ?" என்று கேட்க நீலமேனி நெடியோன் சங்கு சக்கரம் ஏந்திய கரத்தினால் ஒரு கையில் கட்டை விரலுக்கும் ஆள்காட்டி விரலுக்கும் இடையே சிக்கிக் கொண்ட வெண்ணெயோடு காட்சியளித்தார். ராமா வதாரத்தில் குருவாக ஏற்கப் போகும் வசிஷ்டருக்கு வாமனவதாரத்துக்கு முன்பே காட்சியளித்து விட்டார். வசிஷ்ட முனிவ ருடன் விளையாடிய பிறகு வெண்ணெய்ப் பிரானை வழிபட்டு வாமனவதாரம் எடுக்க உள்ளத்தில் நினைவு கொண்டதால் கோல வாமனர் என்று பெயர் பெற்றார். வெண் ணெயை வைத்துச் சொல்லும் கதைகளான படியால் மதுரமாயிருக்கின்றன.

குழந்தையான ஞான சம்பந்தருக்கு இந்தக் கதையை யாராவது சொல்லியிருக்க வேண் டும்.

''விண்டு இரைத்த மலரால் திகழ் வெண்ணெய்ப் பிரான்''—விஷ்ணு மூர்த்தி அர்ச்சனை செய்த மலர்களால் காந்தி பெற்ற பிரான் என்று பாடுகிறார்.

சந்த்யா கால தீபாராதனை மணி அடிக்கிறது. பரபரக்கும் நெஞ்சோடு தீபாராதனையைக் காண விரைகிறோம். விக்ன விநாயகப் பெருமானுக்கு முதல் தீபாராதனை.

அருள் மிகு வெண்ணெய்ப் பிரான் முன் நிற்கிறோம். நல்ல காற்றோட்டமான இடம். நில மட்டத்திலிருந்து உயர்ந்து இருப்பதாலும் ஜன்னல்கள் இருப்பதாலும் மென் காற்று தவழ்ந்து வருகிறது. அடுத்துத் தீப வொளி திகழ்கிறது. நக்ஷத்திர விளக்கு மின்னுகிறது. வசிஷ்ட மகரிஷியின் விரல் தடங்கள் பதிந்த பெருமான். மன்மதனை விழித்து எரித்த சிவபெருமானைத் தீபச் சுட ரொளியில் கண்டு ''இந்த ஒளி எங்கள் சிந்தையில் குடிகொண்டுள்ள மோகாந்த காரத்தைப் போக்கி ஞான ஒளியைத் தர வேண்டும்'' என்று பிரார்த்திக்கிறோம்.

''தேனுலாவு மலர்ச் சோலை மல்கும்
திகழ் சிக்கலுள்
வேனல் வேளை விழித்திட்ட
வெண்ணெய்ப் பெருமானடி
ஞானமாக நினைவார் வினையாயின
நையுமே''

என்ற சம்பந்தர் வாக்கு நம்பிக்கை அளிக்கிறது.

● ● ●

பொங்காதரவொடு அடங்கா மகிழ்வொடு
பெருங்காதலொடு அன்பர் தங்க மயிலினிடை
துங்க வடிவினொடு
சிங்காரவேலவன் வந்தான் எந்தனையாள

வேலேந்திய வேலனின் அழகை எப்படிச் சொல்வது! கந்தா! கடம்பா! வெற்றிவேலா! குமரா! குஹா! ஷண்முகா! என்று பரவசமாக அவன் நாமங்களைக் கூறத்தான் முடியும். சின்னஞ் சிறு புன்னகை. அருள் விழிப் பார்வை. அன்னை அளித்த சக்திவேல். வள்ளி தெய்வயானை இருவரும் சற்று இறுமாப்புடன் நிற்பது போலத் தோன்றுகிறது. முருகன் என்றாலே அழகு என்பார்கள். தீபாராதனை செய்யும்போது ரத்தின கிரீடமும் அதிலிருந்து சற்றுக் கொடி போல் நீண்ட வைரமிழைத்த முடியும் ஜொலிக்கிறது. கிரீடத்தின் மீது மல்லிகைச் சரத்தைப் பாங்குமி காங்கேயன் அணிந்திருக்கிறான். முருகன் வீற்றிருக்கும் மஞ்சன் மயனால் செய்யப்பட்டதோ? சிங்கார வேலவன் என்ற பெயர் என்ன பொருத்தம்! நவ ரத்தின ஆபரணங்களும் மல்லிகை மாலைகளும் சூடி உல்லாசமாக நிற்கும் இவனா சூர ஸம்ஹாரத்துக்குக் கிளம்பப் போகிறான்?

இந்த லாவண்யத்தைக் கண்ட சூரன் யுத்தம் செய்வானா? ஆனால் அஞ்ஞானம் என்று ஒன்று இருக்கிறதே!

சூர ஸம்ஹாரம் செய்த விழா இங்கே வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. சூரபதுமன் முருகப் பெருமானை எதிர்த்து விதம் விதமாக மாயா யுத்தங்கள் செய்தான். பல உருவங்களை எடுத்தான். அசுர மாயையை அழித்து எல்லாப் படைகளையும் வென்று மெய்யறிவாய் நின்ற பிரான் அழகு வடிவமாக விசுவரூபம் எடுத்துச் சூரனுக்குக் காட்சியளித்தார். இந்த இடமே சிக்கல்.

அதன் பிறகு அன்னையைப் பிரார்த்தித்து அவள் தன் மூன்று சக்திகளையும் திரட்டி அளித்த வேலை வாங்கிக் கொண்டு சூரனைச் சம்ஹாரம் செய்து மயிலும் வேலுமாக்கி வாகனமாகவும் கொடியாகவும் செய்து கொண்டான் முருகன்.

ஐப்பசி மாதத்தில் தீபாவளிக்குப் பிறகு வரும் பஞ்சமியில் இந்த வேல் வாங்கும் வைபவம் மிக விமரிசையாக நடக்குமாம். அன்னையின் கருவறையிலிருந்து அர்ச்சகர் வேலைக் கொண்டு போய்க் குமாரன் கையில் கொடுத்த சில நிமிடங்களுக்கெல்லாம் முருகனுடைய திருமேனியில் வியர்வைத் துளிகள் அரும்புமாம். பட்டுத் துண்டால் ஒத்தி ஒத்தித் துடைத்து விசிறிக் கொண்டே இருப்பார்களாம். இந்த அற்புதத்தைக் காண ஐந்தாம் நாள் அடியார்கள் பெருங் கூட்டமாக வருவார்களாம். சிங்கார வேலவனின் வேல் மூன்று பகுதியாக ஆறு முனைகளுடன் திகழ்கிறது.

சக்திவேல் அளித்த வேல் நெடுங் கண்ணியின் சந்நிதி. வெண்ணெய்ப் பிரானை சம்பந்தர் பெருமான் ''வேலொண் கண்ணியினாளை யோர் பாகன்'' என்று சிறப்பித்துப் பாடுகிறார். கேட்கும்போதே அழகு சொட்டுகிறது. சிங்கார வேலவனின் அன்னையல்லவா



⌘ சிக்கல் கோபுரம்

சந்நிதியிலிருந்து நகர மனமில்லாமல் பிராகாரங்களை வலம் வரச் செல்லுகிறோம். தல விருட்சமான மல்லிகைச் செடி காய்ந்து கிடக்கிறது. ஸப்த ரிஷிகள், ஸ்ரீ தட்சிணாமூர்த்தி, துர்க்கையம்மன் இவர்களை வழிபடுகிறோம். படிகள் ஏறிச் செல்லும் பிராகாரத்தில் எதிரே ஸோமாஸ்கந்த மூர்த்தி எழுந்தருளியிருக்கிறார். இது ஸப்த விடங்கத் தலங்களில் ஒன்று அல்ல. என்றாலும் ஒப்பற்ற மரகதலிங்கம் (தியாகராஜர்) இங்கேயும் இருக்கிறது. முருகன் சந்நிதியிலும் இங்கும் வட நாட்டுக் கோயில்களில் நிற்பது போலத் தோன்றுகிறது. பின்னால் சித்திர விசித்திரப் பளிங்குக் கற்களைப் பதித்திருப்பதால் ஏற்படும் தோற்றம். வலம் செய்து இடது பக்கமாக ஒரு கதவின் வழியே நுழைந்தால் இன்னொரு பிராகாரம். அது கோல வாமனப் பெருமாளின் விண்ணகரம் என்று தெரிகிறது. வலம் வரும்போது ''புத்தி மதாம் வரிஷ்டம்'' என்று வால்மீகி முனிவரால் மெச்சப்பட்டவரும், ''சொல்லின் செல்வன்'' என்று கம்பரால் புகழப்பட்டவரும் பெண்களைக் காப்பாற்றும் தெய்வமுமான ஸ்ரீபால ஹனுமானைத் தரிசிக்கிறோம். அஞ்சனை பெற்ற செல்வன். ஜானகியின் துயர் துடைத்தவன். வாயு குமாரன். எப்போதும் வியப்பு ஊட்டும் ஹனுமான் குழந்தை வடிவத்தில் சிறிய மூர்த்தியாகக் காட்சி யளிப்பதால் நம் மனம் வாத்ஸல்ய உவகை கொள்ளுகிறது. இவருக்குக் கட்டமுது செய்வித்து ஸேவிப்பவர்களுடைய மனோரதங்கள் கைகூடும் என்பது நம்பிக்கை.

கபிராஜாய வித்மஹே வாயு புத்ராய தீமஹி
தந்நோ ஹனுமான் ப்ரசோதயாத்

என்று ஹனுமானின் காயத்ரியை ஓதி தீபாராதனை செய்கிறார் பட்டர்.

கோல வாமனரின் சந்நிதிக்குச் சென்று ஸேவிக்கிறோம். அங்கே ஸ்ரீதேவி பூதேவியுடன் அடியார்களான ஸ்ரீ ஆண்டாள், நம்மாழ்வார், விஷ்வக்ஸேனர்; திருமங்கையாழ்வார் எல்லோரையும் கண் குளிரத் தரிசிக்கிறோம். பெருமாள் ஸந்நதியில் சுமார் பதினைந்து நிமிடங்கள் தீபாராதனை காட்டுகிறார் ஸ்ரீ. ஸ்ரீநிவாஸ பட்டர். அழகிய தமிழில் தல வரலாற்றைச் சுவைபடக் கூறிக் கொண்டே தீபாராதனை செய்கிறார். அதிலும் சைவ வைணவக் கதைகள் இரண்டையுமே கூறிக் குமாரன் வேல் வாங்குகிற வைபவத்தையும் விரிவாகச் சொல்லி மகிழ வைக்கிறார். ''கோல வாமனர். கோலம் என்றால் அழகு. சிங்கார வேலவன் சிங்காரம் என்றால் அழகு. வேல் நெடுங்கண்ணி — அழகிய கண்களையுடையவள். கோமள வல்லி — அழகுக் கொடி இப்படி அழகு வடிவமான தலம் இது.'' என்று அவர் கூறும்போது ''நீங்கள் கூறுகிற பாணியும் அழகு'' என்று பாராட்டத் தோன்றுகிறது.

கோமளவல்லித் தாயார் சந்நிதியில் ஸேவித்துக் குங்குமப் பிரசாதம் பெற்றுக் கொண்டு மன நிறைவு அடைகிறோம்.

கோவில் துப்புரவாக இருக்கிறது. பத்துப் பன்னிரண்டு கோயில்களில் உள்ள செப்புச் சிலைகளான தெய்வ மூர்த்தங்களை யெல்லாம் இங்கே ஓர் அறையில் வைத்துப் பாதுகாக்கிறார்கள். கலையழகு ததும்பும் அந்த விக்ரகங்களைப் பார்க்கும்போது ''இத்தகைய அற்புதமானவடிவங்களை ஆங்காங்கே வைத்து வழிபாடுகளை நடத்தி மகிழ்ந்து அருள் பெற முடியாமல் இருக்கும் நிலையை எண்ணித் துயரமாக இருக்கிறது. ஆயிரம் வருட காலமாக வழிபாட்டுக்குரிய மூர்த்திகளாக வீதி உலா வந்து பல இலக்கியங்களை எழுதுவதற்குக் காரணமாக இருந்த உத்ஸவ மூர்த்திகள். இவற்றைச் சிறையில் வைப்பது போல் பூட்டிப் பாதுகாக்க வேண்டியிருக்கிறது. ஆயினும் பத்திரமாக இருப்பதைப் பார்த்து மன நிம்மதியும் ஏற்படுகிறது.

இந்தக் கோயிலில் ஒரு நூல் நிலையம் நடத்துகிறார்கள் என்று கேள்விப்பட்டு வியப்பும் மகிழ்ச்சியும் உண்டாகிறது. கலைமகளுக்குத் தொண்டு செய்வது அரிய பணி. பாராட்டப்பட வேண்டியவர்கள் கோவில் அதிகாரிகள். இலவச மருத்துவ மனை ஒன்றும் நோய் தீர்க்கும் பணியைச் செய்து வருகிறது.

மானேந்திய கரத்தினனான சிவபெருமானின் கோவிலில் புள்ளி மான்கள் இருக்கின்றன. கோவிலில் யானைதான் இருக்கும். மான் இருப்பது அழகாக இருக்கிறது.

சிவபெருமானின் இணையடி சேர்க்கும் வல்லமை தமிழ் மொழிக்கு இருப்பதாகச் சம்பந்தர் கூறுகிறார்.

செந்தண் பூம் பொழிற் சிக்கல்
வெண்ணெய்ப் பெருமானடிச்
சந்தமாச் சொன்ன செந்தமிழ்
வல்லவர் வானிடை
வெந்தநீறணியும் பெருமானடி சேர்வரே!

சம்பந்தர் பாடிய தமிழைப் பாடினால் கைலாய பதவியே கிடைத்து விடும். வேறு என்ன வேண்டும் நமக்கு!

''E. B. யிலே கிளார்க்கா இருக்கிற பெண்ணுக்கு லவ் லட்டர் எழுதினியே என்னடா ஆச்சு?''

''அதை படிச்சப்போ.. அவளுக்கு மின்சாரம் பாய்ஞ்சமாதிரி இருந்ததாம், கரண்ட்பில் அனுப்பியிருக்கா'' -ஆர். பி. ராஜ்



# 22

ரேடியோவில் ஏதோ மேற்கத்திய இசை ஒலித்துக் கொண்டிருந்தது. ஸோபாவின் விளிம்பைப் பிடித்துக் கொண்டு நின்றிருந்த குழந்தை குமார் இசைக்கேற்பக் குதித்துக் கொண்டு சிரித்துக் கொண்டிருந்தான்.

ஃபைலைப் பிரித்தபடி உட்கார்ந்திருந்த கார்த்திக்குக்கு வேலையில் கவனம் செலுத்த முடியவில்லை. பாட்டோடு ஒன்றிப்போன அந்தக் குதியலையும் அதன் அழகையும் காணக்காண மனசில் சந்தோஷம் பூத்தது. புதுப்புனலாய்ப் பாய்ந்து வந்தது.

''தாரா இவனைப் பார்!'' என்றான் உற்சாகத்துடன். ''உனக்கு எப்பேற்பட்ட பிள்ளை பிறந்திருக்கான் பார். இப்பவே பாட்டை ரசிக்கிறான்! டான்ஸ் ஆடறான்!''

தாரா சில விநாடிகள் குழந்தையை யோசனையுடன் பார்த்தாள். பிறகு மெலிதாகப் புன்னகைத்தாள்.

''எனக்கு இதிலெல்லாம் ரசனையில்லேன்னு நினைச்சியா என்ன? நேரம் இல்லாத போது, இருக்கிற நேரத்தை உபயோகமாச் செலவழிக்கணுங்கற போது பாட்டும்கூத்தும்ஆடம்பரம்னுநினைக்கிறவதான்.''

''உன் பிள்ளை அப்படி நினைக்க மாட்டான் பாரு!''

அவள் தோளைக் குலுக்கினாள்.

''அவன் பாடகனாகவே போனாலும் போகட்டும். மனுஷத்தன்மை உள்ளவனுயிருந்தா எனக்குப் போறும்!''

வரவர இவள் எல்லா விஷயங்களையும் ரொம்பவும் சீரியஸ்ஸாகப் பேசுவதாகப் பட்டது அவனுக்கு. குழந்தை பிறந்த பிறகு இந்த ஓராண்டில் திடீர் என்று முதிர்ச்சி அடைந்துவிட்டவள் போல் தோன்றினாள். ஏதோஒருபாரம்அவளை அழுத்துகிற மாதிரி.

பாட்டு நின்றது. குதித்துத் தாளம் போட்டுக் கொண்டிருந்த குமார் அதைக்கவனித்து, திகைத்து அழ ஆரம்பித்தது அவனுக்கு வேடிக்கையாக இருந்தது. ஒரே விநாடியில் குழந்தையின் முகம் குங்குமச் சிவப்பாகப் போயிற்று. தாரா விரைந்து அதைத்தூக்கிச் சமாதானப்படுத்தினாள். அவளுடைய தந்தக் கைகளுக்கிடையில் அதன் ரோஜாநிறம் பளிச்சிட்டது.

சட்டென்று நேற்று கோமதி சொன்னது நினைவுக்கு வந்தது.

எத்தனைவெகுளி அவள் என்று நினைத்துத் தனக்குள் சிரித்தபடி அவன் ''குழந்தையுடைய பிறந்த நாளைக்குப் பார்ட்டி கொடுக்கணும் தாரா! ஆஃபீஸ்லே ஸோபோ உள்பட எல்லாரும் கேட்டிண்டிருக்கா....'' என்றான்.

அவள் தன் கைவேலையிலிருந்து முகத்தை நிமிர்த்தாமல் சொன்னாள்.

''அவாளுடைய பேச்சுக்கெல்லாம் அர்த்தமில்லே கார்த்திக்!''



"என்னைக் கஞ்சன்னு சொல்லுவா!"

அவள் சரேலென்று அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

"சொல்லட்டும்! நம்ம நாட்டிலே லட்சக்கணக்கான குழந்தைகள் ஒருவேளை முழு ஆகாரம் கிடைக்காம தவிக்கும் போது நம்ம குழந்தைக்கு ஆடம்பரமா பிறந்தநாள் கொண்டாடறது பாவம்னு அந்த ஜடங்களுக்குப் போய்ச் சொல்லு!"

அவனுக்குச் சலிப்பேற்பட்டது. 'இவளும் இவளது லட்சியங்களும்' என்று எரிச்சல் வந்தது. அவற்றை எந்த அளவுக்கு கடைப்பிடிப்பது என்கிற வரையறை கிடையாதா?"

"உன்னைத் தவிர உலகத்திலே எல்லாரும் ஜடங்கள் தான்! ஏழை இந்தியா உன் தோள் மேலதான் இருக்கு! நீ ஏன் கல்யாணம் பண்ணிண்டே? ஏன் குழந்தையைப் பெத்துண்டே? ஒரு சமூக அமைப்புக்குள்ளே நுழைஞ்சப்புறம் அந்த சமூகத்தோட ஒட்ட மாட்டேன்னா எப்படி?"

## அமரர் பி. எஸ். ராமையா

ராமையா தன்னுடைய கதைகளில் சம்பவங்களையும் திருப்பங்களையும் அனாயாசமாக நுழைத்தாலும், அடிப்படை அற உணர்வுகளை வலியுறுத்தத் தவறியதே இல்லை. சுவையான கதையம்சம் தருகிற சாக்கில் ருசிபிசகான தர்மங்களைத் தம்பட்டம் அடித்ததே இல்லை. இலக்கியத்தின் இந்த அம்சம் தொடர்பாக அவர் அடிக்கடி கூறும் உதாரணம் இன்னமும் நெஞ்சில் நிழலாடுகிறது. "இலக்கியம் என்பது நிஜமும் கற்பனையும் கலந்த கலவைதான். எதை எந்த அளவுக்குக் கலக்க வேண்டும் என்பது தான் முக்கியம். மூக்கைச் சித்திரிக்க வருகிற எழுத்தாளன் மூக்கிலே வருகிற சளியைப் பற்றியும் சொல்வதில் தவறில்லை. அதற்காகச் சளியைச் சிந்திக் கையிலே பிடித்துக் கொண்டு அவன் அலையக் கூடாது!"

—க. சங்கரசுப்பிரமணியன்



இதுவரை அவன் வெளிப்படுத்தாத ஆத்திரத்தோடு அவன் வெடித்தான். அவள் சிறிது நேரம் திகைத்தவள் போல மௌனமாக இருந்து பிறகு அவனருகில் வந்து அவன் கழுத்தில் கைகளைக் கோத்துக் கொண்டாள். மெல்லச் சிரித்தாள்.

"இந்த அமைப்புக்குள்ளே இருந்தா தான், அதிலேயிருக்கிற அசட்டுத்தனங்களும் வேஷங்களும் புரியும் 'யார்'! நான் அந்த மாதிரி அசட்டுத்தனம் பண்ணாம இருக்கக் கத்துக்க முடியும்!"

நம்மை விட இவளுக்கு இவளுடைய வைத்தியக்காரக் கொள்கைகள் முக்கியம் என்கிற கோபம் அவனுள் வெகு நேரத்துக்கு இருந்தது. குழந்தையின் விளையாட்டில் சற்று குறைந்தது. அதைப் பார்த்து,

"உனக்குப் பட்டை நாமம் போட்டுட்டா உங்க அம்மா" என்றான். "நன்னு அழுது நீயா உன் வயத்தைப் பார்த்துக்கணும்டா! இல்லேன்னு உனக்கு நாலுவேளை பால் கொடுக்கறது ஏழை இந்தியாவிலே ஆடம்பரச் செலவுன்னு...."

"ரொம்ப சலிக்கலே!" என்று தாரா சிரித்தாள். "வா கார்த்திக். ஐ. என். ஏ. மார்க்கெட்டுக்குப் போய் விட்டு வரலாம். கொஞ்சம் சாமான் வாங்கணும்."

"நா காரிலேயே தான் உக்காந்திருப்பேன் இவனோட. நீ போய்ச் சாமான் வாங்கு."

"ஓ. கே!"

ஐ. என். ஏ. மார்க்கெட் வாசலில் இருந்த ஏராளமான கார்களுக்கு நடுவில் புகுந்து லாகவமாகப் பார்க் செய்து விட்டு,

"அரை மணியிலே வந்துடறேன்" என்று அவள் விரைந்தாள்.

அவன் காருக்கு வெளியில் குழந்தைக்கு விளையாட்டு காட்டியபடி நின்றான்.

"ஹலோ கார்த்திக்!" என்ற பரிச்சயமான குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

அலுவாலியா, சட்டென்று ஒரு சந்தோஷம் பரவிற்று.

"ஹலோ!" என்று கையை நீட்டினான். "எத்தனை வருஷமாயிற்று உன்னைப் பார்த்து?"

அலுவாலியா திடமான சதை நிரம்பிய தன் கைகள் இரண்டிலும் அவன் கையைப் பிடித்துக் கொண்டான். வெள்ளை வெளேரென்ற பற்களைக் காட்டிச்சிரித்தான். லேசாக தொந்தி போட்டிருந்தான்.

"நீ ரொம்ப பெரிய நிலைக்குப் போய் விட்டாய் என்று கேள்விப்பட்டேன் கார்த்திக்!"

"ஏதோ இருக்கிறேன்!"

"ஐ புனர்ல் இட் கார்த்திக்!"

"தாங்க் யூ!"

குழந்தை அலுவாலியாவின் மீசையைத் தொட வந்தது.

குரலில் லேசான ஆச்சரியம் இழைய "உன் குழந்தையா?" என்றான் அலுவாலியா.

"ஆமாம், ஏன்?"

"சும்மா கேட்டேன். பார்த்தால் மதராஸிக் குழந்தை மாதிரியில்லே."

அவன் சிரித்தான்.

"என் மனைவி மதராஸி மாதிரி இருக்கிறுளா? தாராவைத்தான் உனக்குத் தெரியுமே!"

"ஓ, யெஸ், நீ சொல்வது வாஸ்தவம் தான். நான் மறந்து போனேன்."

காரணம் புரியாமல் ஒரு நிம்மதி ஏற்பட்டது.

"என்ன செய்கிறுய்?"

"அப்பாவுடைய பிஸினஸ்தான். அது இருக்கிறதோ பிழைத்தேனே!"

"போராட்டமே இல்லாத சரளமான வாழ்க்கை எல்லாருக்கும் கிடைக்காது அநுவாஸியா!"

அநுவாஸியா சிநேகிதமாக அவன் முதுகைத் தட்டிஞன்.

"சரளமா எடுத்துக்கிறவனுக்குத்தான், சரளம் – போராடற வெறி இருக்கறவன் எந்த நிலைமையிலும் போராடுவான். நானே லாலா ஸ்ரீராமுடன் போட்டி போட வேண்டும் என்று நினைத்தால் போராட வேண்டாமா?"

குபீரென்று பழைய நினைவுகள் எல்லாம் அடித்துக் கொண்டு கிளம்பின. ஆறு வருஷங்களுக்கு முன் தான் இருந்ததற்கும் இப்பொழுது இருப்பதற்கும் இருந்த வித்தியாசம். இப்பொழுது இந்த அநுவாஸியா துளியும் மாறுமல் அன்று பேசியதோரணையிலேயே பேசுவதிலிருந்து பிரத்யட்சமாய்த் தெரிந்தது. கேட்பதற்கு முன் எல்லாம் கிடைத்து விட்டால் போராட்டம் ஏன் இருக்கப் போகிறது?

இந்த இடைவெளியில் தனக்கு மட்டும் வயது கூடிவிட்டது போல் பிரமையேற்பட்டது. அநுவாஸியாவிடம் தெரிவது தேக்கமா திருப்தியா என்று குழப்பமாக இருந்தது... தாராவின் பாஷையில் இது ஒரு வகை ஜடத்தனம்.

அவள் நினைவு வந்ததும் சிரிப்பு வந்தது. எல்லா வசதிகளும் இருந்தும் அவள் மட்டும் ஏன் வாழ்க்கையையே ஒரு போராட்டமாக நினைக்கிறுள்? அநுவாஸியா சொன்னதில் கொஞ்சம் உண்மை இருக்க வேண்டும் என்று தோன்றிற்று. இல்லாவிட்டால் நான் கூட கணேசன் மாதிரி இருந்திருப்பேன். காலையிலிருந்து மாலை வரை பிள்ளையாருக்குப் புகழ் மாலை சூட்டிக்கொண்டு, கேள்விப்படாத ஒரு தமிழ்நாட்டு கிராமத்து வெகுளிப் பெண்ணை மனைவியாக ஏற்று, பிறவி ஞானி என்று எல்லாரிடமும் சர்டிபிகேட் வாங்கிக் கொண்டு...

அப்பொழுது யாருக்கும் கவலை இருந்திருக்காது. சகாப்தங்களைப் பற்றிய சர்ச்சை இருந்திருக்காது. 'டென்ஷன்' பத்திதான் கவலைப்பட எனக்கு' என்கிற கரிசன வாக்கியங்கள் வெளிப்பட்டிருக்காது.

ஆனல், அந்த மாதிரித் தேக்க வாழ்வு யாருக்கு வேண்டும்?

அன்று அலுவலகத்தில் முக்கியமான மீட்டிங் இருந்தது. பல மெம்பர்களின் சூடான விவாதத்திற்கு நடுவில் லோபோவிற்குத் திடீரென்று மிகவும் கோபம் ஏற்பட்டது.

முகம் குப்பென்று சிவந்து, தன் கோபத்தை அடக்க முயன்று வாயையும், முகவாயையும், ஒரு கையால் மறைத்தபடி உட்கார்ந்திருந்த நிலையில்,

அந்த ப்ரெஞ்ச் நிறக் கண்களையும், மயிரையும் பார்க்கப் பார்க்க... சரேலென்று நாடி நரம்பெல்லாம் சிலிர்த்து நின்றன.



### பயணிகளின் உரிமைகள்

பயணிகளின் உரிமைகளைக் கோரி அமெரிக்காவில் 26 வழக்குகள் கோர்ட்டில் தொடரப்பட்டிருக்கின்றன. அதில் ஒரு வழக்கில் நீதிபதி அவ்வுரிமைகளை நிலைநாட்டித் தீர்ப்பளித்திருக்கிறுர். நீதிபதி நிலைநாட்டிய பயணிகளின் உரிமைகள்:

(1) பயணிகள் நியாயமான அளவில் பத்திரமாகவும் சௌகரியமாகவும் அழைத்துச் செல்லப்பட வேண்டும்.

(2) வாகனங்களின் உறுப்புக்கள் எல்லாம் நல்ல நிலையில் பராமரிக்கப்பட வேண்டும்.

(3) வாகனங்கள் சுத்தமாக வைத்துக் கொள்ளப்பட வேண்டும்.

(4) நிற்கும் பயணிகளுக்கு வசதியாகத் தகுந்த உபகரணங்கள் அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.

(5) அட்டவணையில் குறித்த கால கெடுவை வாகனங்கள் மீறுமல் அநுசரிக்க வேண்டும்.

தகவல்: ரீசர்ச் அண்ட் ரெஃபரன்ஸ்

கார்த்திக் உறைந்து போனுன். தன்னை ஒருநிலைப்படுத்திக் கொள்ள வெகுநேரம் ஆயிற்று. ஒரு நிலைக்கு வந்ததும் "நமக்குப் பைத்தியம் தான் பிடித்து விட்டது" என்று சமாதானப்படுத்திக் கொண்டான்.

எத்தனை சமாதானப்படுத்தியும் சமாதானமாகாமல் மனசுக்குள் குளிகொட்ட ஆரம்பித்தது. அலுவலகம் முடியும் வரையில் லோபோவின் எதிரிலேயே அன்று

முழுவதும் இருக்க நேர்ந்த நிர்ப்பந்தத்தில் ஒரு பைசாசம் மெல்ல மெல்ல வளர்ந்து அவனுள் பூராவும் ஆக்கிரமித்து மூர்ச்சை முட்ட வைத்தது.

ஓ. கடவுளே அது எப்படி சாத்தியம். இத்தனை குரூரமான கற்பனை என்னுள் எப்படி எழலாம் என்கிற பதைப்புடன் அவன் அதை விரட்ட நேர் எதிரே உட்கார்ந்திருந்த லோபோவின் உருவம்—அந்த ஆங்கிலோ இந்தியச் சிவப்பும் பொன்னிற மயிரும் ப்ரௌன் நிறக் கண்களும் அசுர பலத்துடன் பைசாசத்தை மீண்டும் மீண்டும் மனப்பீடத்தில் ஸ்தாபித்தது.



பிரிட்டனின் ஓஹியாவில் உள்ள ஒரு நீதிமன்றத்தில் விசித்திரமான ஒரு பழக்கம் நிலவி வருகிறது. இங்கு குற்றவாளிகள் தாங்கள் செலுத்த வேண்டிய அபராதத் தொகையை இரத்தமாகச் செலுத்தி விடுகிறார்கள். அது அங்குள்ள மருத்துவ மனைக்கு அளிக்கப்படுகிறது.

குற்றவாளிகள் பெரும்பாலும் அபராதத் தொகை கட்டுவதை விட இரத்த தானம் செய்வதையே விரும்புகிறார்களாம்!

—எஸ். கிருஷ்ணன்

நன்றி: டெக்கான் ஹெரால்ட்

என்னுடைய இந்தச் சந்தேகம் அநியாயமானது என்று அவன் தனக்குள் அவசரமாகச் சொல்லிக் கொண்டான். தாராவுடன் இத்தனை நாட்கள் பழகிய பிறகு அவனது தீவிரமான கொள்கைகளுடன் தினமும் வாழ்ந்து கொண்டிருக்கும்போது எப்படிப்பட்ட அபத்தமான அனுமானம் இன்னுள் எழுந்தால், நான் ஒரு முட்டாள் என்று அர்த்தம். அவளது கொள்கைகளில் மட்டும் நெருப்புத் தெறிக்கவில்லை. அவளே நெருப்பு.

அவளுடைய அம்மாவின் வாழ்க்கை முறை வெறுத்து அந்த வெறுப்புக் கிளப்பியிருக்கும் ஜ்வாலை அது... அதில் அவளே தன்னை பஸ்மமாக்கிக் கொள்ளும் அளவுக்கு அவள் வேஷதாரி இல்லை.

''பித்தலாட்டக்காரி...!''

சட்டென்று உணர்வுகள் உலுக்கப் பெற்றன. முதல் முதல் அவளைப் பார்த்த அன்று விஜய் அகர்வால் அவளை அப்படித் தான் வர்ணித்தான்.

''அவளுடைய சகவாசமெல்லாம் உனக்கு வேண்டவே வேண்டாம்.... எச்சரிக்கை செய்கிறேன். நீ ரொம்ப சாதுப் பையனாய்த் தெரிகிறாய்....''

அவனுக்குத் தெரியாத விஷயங்கள் ஜெய்க்குத் தெரிந்திருக்க வேண்டும். அவளது அதீதமான காதலில் அவனது பார்வைக்கு எதுவும் படாமல் போயிருக்க வேண்டும்.... அவளது சாத்வீகத்தை அவள் உபயோகித்துக் கொண்டிருக்கவேண்டும்...

இதை நான் எப்படி நம்புவேன் ஆண்டவனே?

மண்டை சுக்குநூறாக வெடித்து விடும் போல் இருந்தது.

''உன்னைப் பத்திதான் கவலையாயிருக்குடா கார்த்திக்! அடிபட்டுக்காம இருக்கணுமேன்னு பயமா இருக்கு!''

நினைவலைகளின் கருணையற்ற தாக்குதலில் அவன் மறுபடி அதிர்ந்து போனான்.

எத்தனை பெரிய அடி இது! ஆள் அசந்த சமயத்தில் கிடைத்த சவுக்கடி! ஆயுசுக்கும் சாசுவதமாகப் பார்வையையும் முதுகையும் நிமிர்த்த முடியாத அடி!

எப்படி நடந்திருக்கும்? எப்படி நடந்திருக்கும். லோபோவின் மேல் அத்தனை வெறுப்பிருக்கும் அவளுக்கு? நாடகமாடுகிறாளா? நான் வேஷதாரி இல்லை என்று சொல்லியபடியே வேஷம் போடுகிறாளா? மிதமிஞ்சிய ஆத்திரத்தில் மூளை இயங்கவே மறுத்தது.

அவன் வீட்டை அடைந்த போது முன்னறையில் தாரா குழந்தையுடன் உட்கார்ந்திருந்தாள். 'ஹாய்' என்றாள்.

குழந்தை அவனைப் பார்த்துப் பெரிய ஆரவாரத்துடன் சிரித்தது.

தன்னை மேலும் கட்டுப்படுத்திக்கொள்ள முடியாதவன் போல் அவன் தாராவின் முகத்தை ஊடுருவிப் பார்த்துக் கேட்டான் ஆங்கிலத்தில்:

''உண்மையைச் சொல். இவன் எனக்குப் பிறந்த குழந்தையா?''

அவள் திடுக்கிட்டு அவனைப் பார்த்தாள். பிறகு தலையைக் குனிந்து மெல்லிய குரலில் சொன்னாள்:

''நான் அப்படித்தான் நினைக்கிறேன் கார்த்திக்!''

(தொடரும்)

# வைரமுத்து பக்கம்

நம் ஊரில்கூட மறந்துபோன மலர்கள் மகரந்தச் சேர்க்கை செய்ய ஆரம்பித்திருக்கின்றன.

மத்தியக் கல்விக் கழகம் மிகமிகத் தாமதமாய் போதி மரத்தடிக்குப் போய்ச் சேர்ந்திருக்கிறது.

அண்மையில் மத்திய கல்வி அமைச்சர் திருமதி ஷீலா கௌல் தலைமையில் நிறைவேறியிருக்கும் திண்ணிய தீர்மானங்கள், தாமரைப் பூவில் உறங்கிக் கொண்டிருக்கும் சரஸ்வதியின் முகத்தில் தண்ணீர் தெளிப்பதாக இருக்கின்றன.

அதில் ஒரு தீர்மானம், மூடிக் கிடக்கும் நம் நெற்றிக் கண்ணைக் குண்டூசியால் குத்துவது போல் இருந்தாலும், பல தீர்மானங்கள் வாராது போல் வந்த மாமழையாகவே மகிழ வைக்கின்றன.

ஆரம்பக் கல்வியில் பத்தாவது வகுப்பு வரை யாரையும் ஃபெயில் ஆக்கிவிடக்கூடாது என்ற தீர்மானம் இந்த நாட்டின் பாமர ஜாதிப் பையன்களுக்கெல்லாம் கிடைத்த பரிசாகும் என்றே கருதுகிறேன்.

ஏனென்றால் தேர்ச்சி பெறாத ஒரே காரணத்திற்காக இந்த நாட்டில் கருகிப்போன அரும்புகள் ஆயிரம் ஆயிரம்!

''பாஸானால் மேலே படி; இல்லையென்றால் இருக்கவே இருக்கிறது எருமை மாடு'' என்பதுதான் கிராமத்துத் தகப்பன்கள் தினம் தினம் சொல்லிக் கொண்டிருக்கும் திருக்குறள்.

அலெக்ஸாண்டிரியாவைக் கைப்பற்றிய ஓர் அரசன் அங்கிருந்த லட்சக்கணக்கான ஏடுகளைக் கொண்ட நூலகத்தை உடனே கொளுத்திவிட உத்தரவிட்டானாம்.

ஏனென்று கேட்டபோது அவன் சொன்னானாம்:

''இங்கிருக்கும் ஏடுகளெல்லாம் குர்-ஆனுக்கு விரோதமான கருத்துக்களைப் பேசினால் அவை எதற்கு? கொளுத்திவிடுங்கள்.

''ஒருவேளை இங்கிருக்கும் ஏடுகளெல்லாம் குர்ஆனின் கருத்துக்களையே பேசினால் அவை எதற்கு? குர்ஆனே போதும். கொளுத்தி விடுங்கள்.''

கிராமத்துத் தகப்பன்கள் கூடப் பல நேரங்களில் அந்த அரசனைப் போலவே முடிவெடுக்கிறார்கள்.

''இனிமேல் நீ பாஸானாலும் படிக்க வேண்டாம்; ஃபெயிலானாலும் படிக்க வேண்டாம்.''

இப்படி நிகழ்கால வாழ்க்கை வேறு அவன் விரும்பிய கல்வியை வேட்டையாடிவிடுகிறது.

தேர்வில் ஒரு மாணவன் தோற்றுப்போவதென்பது அவன் மட்டுமே சம்பந்தப்பட்டதன்று.

அவன் மட்டுமே சம்பந்தப்படாத ஒரு பாவத்திற்கு அவன் மட்டுமே தண்டனை அனுபவிப்பது என்ன நியாயம்?

நமது கல்வி முறையில் போதிப்பதை விட சோதிப்பது அதிகமாக இருக்கிறது.

ஓராண்டு வரைக்கும் கூட நமது கல்வி நம் மாணவனுக்கு அறிவு கொளுத்தவில்லையென்றால் நாம் நம் கல்வி முறையின் ஆண்மைக்கு ஒரு பரீட்சை வைக்க வேண்டியிருக்கிறது.

இந்தத் தேர்வு முறை எழுத்தறிவு பெறும் முதல் தலைமுறையின் குழந்தைகளையே கொன்று குவிக்கிறது.

காதல் தோல்விகளும், தேர்தல் தோல்விகளும் நம் நாட்டின் ஜனத்தொகையைக் கணிசமாகக் குறைத்திருக்கின்றன என்பது கவலைக்குரிய ஓர் உண்மையாகும்.

எழுத்தறிவே இல்லாத குடும்பத்தில், வறுமையின் இருட்டுக்குள் இருந்து வருகிறவன் எப்படி ஒரே வருஷத்தில் சூரியனாகச் சுடர்விட முடியும்?

நமது சமூகப் பொறுப்பு என்பது அவர்களுக்கு அறிவூட்டுவதுதானே அன்றி, அவநம்பிக்கை ஊட்டுவது அன்று.

அவர்கள் மூளையில்
விதையைப் போல்
தூவப்பட வேண்டிய அறிவு
ஆணியைப் போல்
அறையப் படுகிறது

இந்த
இள மூங்கில்களை
இந்திலேயே வளைக்க
ஆசைப்பட்டார்கள்!

பல மூங்கில்கள்
வளைக்கும் அவசரத்தில்
முறிக்கப்பட்டதால்
விறகுக் கடைகளில்
விற்பனையாயின!"

(''இன்னொரு தேசிய கீதம்'' பக்கம் 88)

என்று என்னைப் போன்றவர்கள் ஆதங்கப்பட்டு அழுத கண்ணீரைத் துடைப்பதற்கு, கல்விக் கழகத்தின் சுட்டுவிரலுக்குச் சுறுசுறுப்பு வந்திருக்கிறது: நன்றி.



## தாமத ஞானம்

பல வகையிலும் பயன்படும் இதனை

உபயோகிக்காமல் இவ்வளவு நாள் எவ்வாறு சமைத்தோம்!

# பிரெஸ்டீஜ் அளிக்கும் பிரஷர் பேன்



வறுக்க



பொரிக்க



வதக்க



வேக வைக்க



இதில் நீங்கள் வறுக்கலாம், பொரிக்கலாம், தாளிக்கலாம், வதக்கலாம் பின்பு மூடி வைத்து வேக வைக்கலாம்—பிரஸ்டீஜின் பிரஷர் பேன் மிகவும் வசதியானது. உங்களுக்காகவே தயாரிக்கப் பட்டுள்ளது. உங்கள் குடும்பத்தினரின் சுவைக்கேற்ற பதார்த்தங்களைச் சில நிமிடங்களில் தயாரிக்க இது உதவுகிறது.

மூடியில்லாத, கனமான இந்த வாணலி வெங்காயம், காய்கறிகள், மசாலா, மாமிசம், கோழிக்கறி இவற்றைக் குறைந்த அளவு எண்ணெயில் வதக்க உதவுகிறது.

இதைப் பிரஸ்டீஜின் மூடியினால் மூடி விட்டால் உணவு சீக்கிரம் வெந்து விடுகிறது. சிக்கன் புத்தா—20 நிமிடங்களில் தயார். மட்டன் தோப்பியாசா—25 நிமிடங்களில். தம் ஆலு—இன்னும் சீக்கிரம். மற்றக் காரியங்களைக் கவனிக்க நேரத்தை மிச்சப்படுத்துகிறது. எரிபொருளும் நீண்ட நாட்களுக்கு வருகிறது.

பிரெஸ்டீஜ் இந்தப் பிரஷர் பேனைத் தருகிறது—இவர்கள்தான் இந்தியாவில் முதன் முதலாக மிக அதிகமாக விரும்பி உபயோகிக்கப் படும் பிரஷர் குக்கரைத் தந்தவர்கள்—பிரஷர் குக்கருக்கு முழுப் பாதுகாப்பைத் தரும் ஒப்பற்ற காஸ்கெட் ரிலீஸ் ஸிஸ்டம் என்ற அமைப்பைப் புகுத்தியவர்களும் இவர்களே.

பிரெஸ்டீஜ் பிரஷர் பேன் உங்கள் சமையலறையில் மிக அதிகமாக உபயோகப்படும் பாத்திரம். இது உறுதியான சூடேறாத ஹேண்டில்களுடனும், கனத்த அலுமினியத் தகட்டினாலான அமைப்புடனும் தயாரிக்கப் படுகிறது. இனி ஒரு பாத்திரத்தில் வதக்கி, இன்னொரு பாத்திரத்தில் வேகவைத்துக் கடைசியில் பிரஷர் குக்கரில் வேக வைக்கத் தேவையில்லை. இந்தப் பிரெஸ்டீஜ் பிரஷர் பேன் ஒரு பாத்திரத்திலேயே பல பாத்திரங்களின் வசதிகளைத் தந்து விடுகிறது.

**பாதிக்கும் குறைவான விலையில் இந்தப் பிரஷர் பேனை வாங்குவது எவ்வாறு?**

**உங்களிடம் ஏற்கனவே ஒரு பிரெஸ்டீஜ் பிரஷர் குக்கர் இருந்தால் நீங்கள் அதிர்ஷ்டசாலிகள்!**

ஒரு சாதாரண கனமான வாணலியின் விலையில் உங்களுக்குப் பிரெஸ்டீஜ் பிரஷர் பேன் கிடைக்கிறது.

உங்கள் பிரஷர் குக்கரின் மூடியை இதில் பொருத்தி விட்டால் உங்களுக்கு ஒரு புது பிரெஸ்டீஜ் பிரஷர் பேன் குறைந்த விலையில் கிடைக்கிறது. உங்கள் கடின உழைப்பின் ஊதியத் திற்குக் குறைந்த விலையில் தரமான தயாரிப்புகளைத் தருவதே பிரெஸ்டீஜின் குறிக்கோள்.

**இதுவரை உங்களிடம் பிரெஸ்டீஜ் பிரஷர் குக்கர் இல்லாவிட்டால்**

இதோ உங்களுக்கு இரட்டை லாபத்திற்கு ஒரு வாய்ப்பு! இப்பொழுது நாங்கள் இரண்டு அபூர்வமான சமையலறை உபகரணங்களை அளிக்கிறோம்—இந்தியாவிலேயே மிகுந்த பாதுகாப்பைத் தரும் உன்னத மான 'காஸ்கெட் ரிலீஸ் ஸிஸ்டம்' கொண்ட பிரஷர் குக்கரையும், ஆவலைத் தூண்டும் பிரஷர் பேனையும் தருகிறோம். ஒன்றின் விலைக்குச் சிறிது கூடுதலான விலையிலேயே இரண்டும் கிடைக்கிறது. ஒரு மூடி இரண்டுக்கும் உதவுவதால் உங்களுக்கு ரூ 150/-க்கும் அதிகமான லாபம்.

Prestige
PRESSURE
PAN

ttk தயாரிப்பு

maa(S) PP1Tam h62

# அத்தியாயம் 24

சென்னை துறைமுகத்தில் எண்ணெய்க் கப்பல்கள் நிற்பதற்கென்று, தனியே இடம் இருக்கிறது. பெரிய பெரிய கப்பலின் அடி வயிறு முழுவதும் ததும்பத் ததும்ப டீசலோ பெட்ரோலோ வரும். லாரிடேங்குக்கு மாற்றி எடுத்து வர முடியாது. தண்டையார்பேட்டையிலுள்ள ஆயில் கம்பெனி கொட்டில்களுக்கு அவை பைப் லைன் மூலம் அனுப்பப்படும். கப்பலின் அடி வயிற்றில் குழாய் பொருத்தி விசையான மோட்டார் பம்புகளின் மூலம் கடுமையான அழுத்தத்தில் வேகத்தில் ஆயில் கம்பெனி கொட்டில்களை அவை வந்தடையும். முதலில் பைப் லைனில் கடல்நீர் பாய்ச்சுவார்கள். லைன் முழுவதும் துப்புரவான பிறகு பெட்ரோலோ டீசலோ அனுப்புவார்கள். இரண்டு அடி விட்டமுள்ள பைப் லைன் ராயபுரம் வழியாகப் பூமிக்கடியில் தண்டையார்பேட்டை போய்ச் சேரும். அந்தப் பக்கம் மூன்று நான்கு ஆயில் கம்பெனிகள் இருக்கின்றன. ஆனால் பைப்லைன் எல்லோருக்கும் பொது. அவரவர் கம்பெனி எண்ணெய்க் கப்பல் வந்தவுடன் அந்தந்த கம்பெனி ஆட்கள் எண்ணெயை பைப் லைன் மூலம் அனுப்ப ஏற்பாடு செய்வார்கள். தண்டையார்பேட்டை அருகே வால்வைத் திருப்பி அவரவர் கம்பெனிக்குள் செலுத்துவார்கள். வடக்கே திருப்பதியிலிருந்து தெற்கே தஞ்சை வரை பல முக்கிய நகரங்களுக்கு இந்த ஆயில் கம்பெனிகள் போட்டி போட்டு டீசலும் பெட்ரோலும் விற்பனை செய்தன. அரசுடைமையான கம்பெனிகள் என்றாலும் ஆரோக்கியமான வியாபாரப் போட்டி இருந்து வந்தது. இந்த பைப்லைன் வசதியை கம்பெனிகள் பங்கு போட்டுப் பராமரித்தன.

கொருக்குப்பேட்டை ரயில்வே லைன் தாண்டிப் புறம்போக்கு நிலத்தில் அந்தச் சிறிய சேரி உருவாகியிருந்தது. அந்தச் சேரிக்கு நடுவே உறுதியான ஒரு குடிசை பைப் லைனுக்கு நேர் மேலாகக் கட்டப்பட்டிருந்தது. எத்தனையோ புறம்போக்கு நிலத்தில் உருவான எத்தனையோ சேரி போலத்தான் அந்தச் சேரியும் காட்சியளித்தது. கட்சிக் கொடிகள் பறக்கப் பெரிதாயிற்று. ஆனால் அந்தச் சேரியும் குடிசையும் திட்டமிடப்பட்ட செயல். அந்த பைப்லைன் ரகசியம் அவனுக்குத் தெரிந்தும் வெகு நாள் யோசித்தான். தன் குடிசையைத் திடமாய் எழுப்பிக் காத்திருந்தான். யாரும் கலைக்கச் செய்வார்களோ என்று கவனித்தான். பூட்டின குடிசைக்குள் பூமியைத் தோண்டி பைப் லைனில் சுண்டுவிரல் அகலத்திற்கு ஓட்டை போட்டுப் பரிசோதித்தான். அந்த வேகத்தில் பீச்சியடிக்கும் பெட்ரோலைக் கண்டு பயந்தான். அழுத்தமான வாஷிருப்ட் வால்வுகள் போட்டு ஒரே ஒரு நாள் இருநூறு லிட்டர் எடுத்தான். காத்திருந்தான். யாரும் கலைக்கச் சொல்வார்களோ என்று பயந்தான். ஆயிரக்கணக்கான லிட்டர் பெட்ரோலும், டீசலும் ஓடுகிற பைப் லைனில் இருநூறு லிட்டர் காற்றோடு கரைந்ததாய்க் கணக்கு எழுதப்பட்டதே தவிர கவலைப்பட ஆள் இல்லை. சட்டென்று தீப்பிடிக்கும் பெட்ரோலைத் தவிர்த்து விட்டு டீசலை மட்டும் திருட ஆரம்பித்தான். கடல்நீர் எப்போது போகிறது. பெட்ரோல் எப்போது போகிறது டீசல் எப்போது போகிறது என்று சப்தம் மட்டுமே துணையாய்க் கொண்டு தெரிந்து கொண்டான். மேலும் இரண்டு வால்வுகள் வைத்து எந்தக் காரணம் கொண்டும் உயர் அழுத்தத்தால் எந்தத் தீங்கும் வெடிக்காத திறமையுடன் டீசல் திருடத் துவங்கினான். இருநூறு லிட்டர் டிரம்கள் கொண்டுவந்து மணிக் கணக்கில் காத்திருந்து நிரப்பி, மாட்டு வண்டியிலேற்றிச் சேரிக்கு அப்பால் தனியே ஆஸ்பெண்டால் கொட்டடியில் அடுக்கி வைத்தான். பாதி விலைக்கு விற்றான். மேற்கொண்டு காலி டிரம்கள் தேவைப்பட்டன. சீக்கிரம் விற்க அவசியம் ஏற்பட்டது. பாதிவிலை அதுவும் கடனில் என்கிற வியாபாரம் வந்தது. முதலில் தெரிந்த லாரி டிரைவர்களுக்கு மட்டும் என்று துவங்கி வட்டம் பெருகி புரோக்கர்கள் ஏற்பட்டுத் திடமாய் வியாபாரம் வளர்ந்தது. ஒருநாளைக்கு ஆயிரம் இரண்டாயிரம் லிட்டர் சுலபமாய் பைப் லைனிலிருந்து எடுக்க முடிந்தது. உதவிக்கு ஆள் தேவைப்பட்டது. கூட்டு நட்புகள் வளர்ந்தன. பணம் புரண்டு புரண்டு சேரியை வளப்படுத்தியது. சேரி வாசலில் ஆட்டு இறைச்சிக் கடையும் மளிகைக் கடையும் தோன்றின. சென்னை நகரத்து சேரிகளில் ஆட்டு இறைச்சிக்கடை உள்ள சேரி அதுமட்டும்தான். இந்த மாற்றங்கள் அவனைப் பயமுறுத்தின. காத்திருந்தான். யாரும் கலைக்கச் சொல்வார்களோ என்று கவனித்தான்.

ஏதுமில்லை. துறைமுகத்திலும் எண்ணெய்க் கம்பெனியிலும் அதிகாரிகள் தலைமுடியைப் பிய்த்துக் கொண்டார்களே தவிர இந்தச்

"என்னடா கோபு சாப்பாட்டில் இவ்வளவு நீள தலைமுடி கிடக்கு."

"இப்போதாவது என் மனைவிதான் சமைக்கிறாள் என்கிறதை ஒத்துக் கிறியா."

- கீழை. அ. கதிர்வேல்.



சேரியை யாரும் சந்தேகிக்கவேயில்லை. இப்படி ஒருவனால் திருட முடியும் என்ற யோசனையே யாருக்கும் வரவில்லை.

பூமித்தாய், கொருக்குப்பேட்டை பூமித்தாய் அவனைப் பணத்தில் மிதக்க விட்டாள்.

களங் ஓசை மாறியதும் அவனும் அவன் கூட்டாளியும் எழுந்து நின்றார்கள்.

''டீசலு தான்...

''சுத்தமா டீசலுதான்.''

''பிரிச்சிருட்டுமா?''

''பிரி''.

பூமிக்கு மேல் முதல் வால்வு. பிறகு நேர் மேலாய் ஆள் உயரம் எழுந்த பைப்புக்கு அருகே இரண்டாவது வால்வு. பிறகு வலப்பக்கம் திரும்பிக் குறுகலான பைப்பின் வாய் ஓரம் மூன்றாவது வால்வு. ஒவ்வொன்றாய்த் திறக்கத் திறக்கத் தரதரவென்று மெல்லிய ஓசையுடன் பேரல் நிரம்பிற்று.

ஆயிரம் லிட்டர் டீசல் பைப்லைனிலிருந்து பிரிக்கப்பட்டு, பேரல்களில் நிரப்பப்பட்டு மாட்டு வண்டியில் ஏற்றப்பட்டுக் காசாயிற்று.

''பொறுமையாறுங்கப்பா.''

''யாரு?''

''தொட்டி ஆளுங்க. எங்க கறக்கறே எந்த வண்டில கறக்கறேன்னு புடுங்கறுனுங்க.''

''வாயத் தொறந்தே கொன்னுப் போட்டுறுவேன்.''

''நானு, நல்லாத் தொறப்பேனே, ஏதோ உன் புண்ணியத்துல அரிசிச் சோறு துன்றேன். எதுக்கு வாயத் தெறக்கறது'' கூட்டாளி பல் தெரியச் சிரித்தான்.

சென்னையில் பல வருடங்களுக்கு முன் பஞ்சம் வந்த போது வடசென்னைப் பக்கம் சிமெண்டு தொட்டிக் கட்டி அதில் அரிசிக் கஞ்சியை நிரப்பி ஏழைகளுக்கு விநியோகம் செய்தார்கள். டீசல் இன்று அந்தப் பஞ்ச நேரத்துக் கஞ்சி போல அங்கே வியாபாரம் ஆயிற்று. அதனாலேயே தொட்டி என்ற பெயர் வந்தது.

''ராமசாமி எதற்கு 'ஹெல்மெட்' போட்டுக் கொண்டு பக்கத்து வீட்டுக்குப் போகிறான்?''

''அந்த வீட்டுப் பெண்ணை என்னைக் காதலிக்கிறாயா என்று கேட்கத்தான்.''

—கணபதி சுப்பிரமணியம்



ஆயில் கம்பெனியில் டீசல் பிடித்துக் கொண்டு போகும் லாரி டேங்கரில் பத்தாயிரம் லிட்டர் அல்லது பனிரெண்டாயிரம் லிட்டர் லாரியின் கொள்ளளவுக்கேற்றபடி, இருக்கும். டீசல் பெட்ரோல் எதுவும் வெப்பத்தில் விரிவடையும். பனிரெண்டாயிரம் லிட்டர் டீசல் ஏற்றிய லாரி டேங்கரை இரண்டு மணி நேரம் வெய்யிலில் நிற்க வைத்துவிட்டு, லாரி மீது ஏறி அலுமினியக் குச்சிவிட்டு அளந்தால் பனிரெண்டாயிரத்து இருநூறு லிட்டர் அளவு காட்டும். வெப்பம் செய்கிற வித்தையிது.

கம்பெனியில் ஏற்றிய சரக்கை டேங்கர் ஆட்கள் தொட்டிக்குக் கொண்டு வருவார்கள். சீல் உடையாமல் இருநூறு லிட்டர் டீசல் எடுப்பார்கள். தொலைவான ஊருக்குக் குலுக்கலுடன் வண்டியை ஓட்டிப் போவார்கள். வழியில் வெய்யிலில் நிற்க வைத்து எடுத்துப் போவார்கள். வெப்பத்தால் விரிவடைந்த அளவு, குலுக்கலில் வண்டி உள்ளே அலை அடிக்க உயர்ந்த அளவு இவையிரண்டும், நடுவே இறக்கிய டீசலைக் கண்டுபிடிக்க முடியாமல் செய்யும். அந்தத் தொட்டியில் இறக்கின இருநூறு லிட்டர் காசுடன் சந்தோஷமாய் பயணம் தொடரும். அந்தக் காசை டிரைவர், கிளீனர், சிலசமயம் லாரி டேங்கரின் உரிமையாளர் எல்லோருமே பங்கு போட்டுக் கொள்வார்கள். இந்த வம்பில் ஈடுபடாதவர்களும் உண்டு.

அந்தத் தொட்டியில் டீசல் விலை பெட்ரோல் பங்க் விலையை விட எட்டணா லிட்டருக்குக் குறைவாய் கிடைக்கும். வழியில் டீசல் போட்டுக் கொள்கிறேன் என்று உரிமையாளரிடம் காசு வாங்கிவரும் டிரைவர் தொட்டி டீசல்தான் போடுவான். லிட்டருக்கு எட்டணா மிச்சம் பண்ணி வழிச் செலவுக்கு வைத்துக்கொள்வான்.

பைப்லைன் ஓட்டைக்குப் பிறகு, தொட்டி டீஸல் வியாபாரம் படுத்து விட்டது. டிரைவர்களைத் தேடி அலையும் நிலை ஏற்பட்டது. இன்னும் குறைந்த விலைக்குக் கொடு என்கிற வாக்கு வாதம் வந்தது. தொட்டி ஆட்கள் கலவரமானார்கள்.

''பேர்பாதி விலைக்கு டீசலா எப்படிக் கட்டுப்படியாவுது?''

''எவன்டா விக்கறவன்? எங்க திருடுறான் தெரியலையே.''

''கடன் தரான். நூறு லிட்டர் கடனு அதுவும் பேர் பாதி விலைக்கு. இதுல என்னவோ கோல்மால் இருக்குதுப்பா. கண்டுபிடிக்கணும்'' கழுகாய்ச் சுற்றிச் சுற்றி வந்தார்கள். இடம் இடமாய்த் தேடினார்கள். தெரியவில்லை.

அவன் சகலமும் புரிந்தவனாய் இருந்தான். எல்லா அசைவுகளையும் நோட்டமிட்டபடி மௌனமாய் இருந்தான். காத்திருந்தான். சேரியைக் கலைக்கச் சொல்வார்களோ என்று கவனித்தான்.

இல்லை. ஏதும் இல்லை. எவருக்கும் இந்த சூட்சமம் புரியவில்லை.

சேரி வாசலில் உள்ள கறிக்கடைக்குத் தினமும் புதிதாய் இரண்டு ஆட்டுக் குட்டிகள் தோலுரிக்கப்பட்டு இறங்கின. ''இந்தக் கடைல விக்கிற கறி மாதிரி மெட்ராஸ்ல எங்கேயும் உனக்கு நல்ல ஆட்டுக்கறி கிடைக்காது.'' அந்தப் பக்கம் வந்த தொட்டி ஆளுக்கு யதேச்சையாய் யாரோ விவரம் சொன்னார்கள். தொட்டி ஆள் கறிக் கடையை வியப்புடன் பார்த்தான். சேரி அருகே கறிக்கடை. ஆட்டுக் கறிக் கடை. கிலோ இருபத்தியெட்டு ரூபாய் விற்கிற மாமிசக் கடை.

தொட்டி ஆளுக்கு மூக்கு அரித்தது. யோசித்தான். தலையில் துண்டு போர்த்தி மரத்தடியில் உட்கார்ந்து கொண்டான். நான்கு மணி நேரத்தில் அவனுக்குச் சகலமும் புரிந்து போயிற்று. மாட்டு வண்டி அசைந்து அசைந்து போகப்பின்னால் போய் வாசலை பார்த்தான். டீசல்.

''டேய் பைப்புலேர்ந்து எண்ணை திருடி எங்க வவுத்திலே மண்ணு போட்டே டேய்...'' கோபம் பரவி ஆவியாய் முகத்தில் அடித்தது.

பட்டயம் எடுத்தவன் பட்டயத்தாலே சாவான். முள்ளை முள்ளே அப்புறப்படுத்தும். வைரத்தை வைரமே அறுக்கும். இந்த நியதிகள் இவ்வுலகத்தில் எங்கேயும் எப்போதும் நடந்தபடிதான் இருக்கின்றன.

**வ**ரதன் சாமுவேலுக்கு புரோக்கரை அறிமுகப்படுத்தினான். சாமுவேல் காசு எண்ணிக் கொடுக்கப் புரோக்கர் வரதனை மட்டும் அழைத்துப் போய் இருநூறு லிட்டர் டீசல் பாதி விலைக்குக் கொடுத்தான். டீசல் பேரல் மூன்று சக்கரவண்டியில் ஏற்றப்பட்டு சாமுவேல்லாரிக்குப்போயிற்று.

பார்ட்டி கூட்டிக்கொண்டு வந்ததற்காக புரோக்கரிடம் வரதன் கமிஷன் வாங்கினான். சாமுவேலிடம் போய்ப் பாதி விலை டீசல் இடம் காட்டிக் கொடுத்ததற்குத் தனியே விலை பேசினான். பையில் பணம் புரண்டு. சாமுவேலுக்கு நன்றி சொல்லி வேறு வண்டி பார்ப்பதாய்ச் சொல்லிவிட்டுப் புறப்பட்டான்.

தண்ணித் தொட்டி பக்கம் போகாமல் தண்டையார்பேட்டை பக்கமே சுற்றிக் கொண்டிருந்தான். நிறையக் குடித்தான். வயிறு புடைக்கச் சாப்பிட்டான். மாநகராட்சி குழாயில் குளித்துத் துணி துவைத்தான். நடைபாதையில் தூங்கினான்.

வரதனுக்குச் சொந்தம் என்று எவரும் இல்லை. எதுவும் இல்லை. அவனிடமிருந்தது ஒரே ஒரு டிரைவிங் லைசென்ஸ். நான்கு முறை சிவப்புக் குறிப்பு எழுதப்பட்ட டிரைவிங் லைசென்ஸ்.

**ப**டப்பை முதலியாரிடம் ஆறு டாங்கர் லாரிகள் இருந்தன. லாரி சம்பாதித்துக் கொடுத்த பெரிய வீடும் பிளிமத் காரும் இருந்தன. ஆறு லாரி டாங்கரும் பெட்ரோல் டீசல் அடித்தன. எல்லா ஆயில் கம்பெனிகளுக்கும் வேலை செய்தன. ஒரு லோக்கல் டிரிப் பிறகு ஒரு பெரிய டிரிப்பு. எல்லா டாங்கருக்கும் இதுதான் கணக்கு. லோக்கல் டிரிப்புக்கு ஆயில் கம்பெனி எண்பது ரூபாய் எழுபது பைசா கொடுத்தது. தண்டையார்பேட்டையிலிருந்து கிண்டி போக எண்பது ரூபாய் எழுபது பைசா. இது கட்டுப்படியாகிற விலை இல்லை. இந்த விலைக்கு வண்டி ஓடாது. ஆனால் ஆயில் கம்பெனி இதற்குமேல் கொடுக்கவும் செய்யாது.



மாமியார்: தலைவலிக்கு டெலிபோனில் உன் தோழி மருந்து சொன்னாள் என்றாயே, ஆயுர்வேதமா? ஹோமியோபதியா?
மருமகள்: 'ஹலோ'பதி!

'கோகு'

''ஷிப்டுல அம்பத்தியாறு சார்ஜெண்ட். அத்தனை பேருக்கும் மொய் எழுதணும். இதை வெளில சொல்ல முடியுமா?

''வண்டிய பழுதில்லாம ஓட்ட டிரைவர் கிளீனருக்கு மேல் துட்டு தரணும். கணக்குக் காட்ட முடியுமா?

''சேட்டுகிட்டக் கடன் வாங்கி வண்டி எடுக்கறோம். ஒரு மாசம் துட்டு கட்டாத போனா சேட்டு கட்டாத துட்டுக்கு முப்பத்திரெண்டு பர்சண்ட் ரசீதில்லாத வட்டி வாங்குறான். ரிப்போர்ட் பண்ண முடியுமா?

''எண்பது ரூபா எழுபது பைசால இத்தனி செலவும் போய் எனக்கு பத்து ரூபா நிக்குமா? எப்படி வண்டி ஓடும்? எப்படி கட்டுப்படியாவும். ஆயில்கம்பெனிலவாடகை ஜாஸ்தி கேட்டா அந்த வாடகை துட்டுபெட்ரோல்ல விழும். டீசல்ல விழும். டீசலோ பெட்ரோலோ விலை ஏத்தினா ஊர் ஜனம். கோவிச்சுக்குறான்.

''அப்பறம் நடுவுல மாட்டறது உ'ரு லாரி ஓனரு.

''டீசலு திருடத்தான் செய்வான். என்னன்றே அதுக்கு. சாமர்த்தியம் இருந்தா புடிக்கக்கோ போ.''

படப்பை முதலியார் வண்டி தொட்டியில் நின்றது. பத்தாயிரம் லிட்டரில் இருநூறு இறக்கி விட்டு மாயவரம் போகக் காத்திருந்தது. டீசல் கறந்த காசில் டிரைவருக்கும் முதலியார் பையனுக்கும் சண்டை வர, டிரைவர் கெட்ட வார்த்தைகளை இறைத்து விட்டுத் துண்டைத் தோளில் போட்டுக் கொண்டு போய் விட்டான். வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த வரதன் டிரைவரானான்.

(தொடரும்)

# வேலைப்பாடுகள் மிகுந்த காதி கிராப்ட் தோல் பொருள்கள்.

மிக நேர்த்தியான டிசைன்களில், கைவேலைப்பாடுகள் நிறைந்த தோல் பொருள்கள் காதி கிராப்டில் தயாரிக்கப்படுகின்றன. அவைகள் நீண்ட காலமாய் நயமான தயாரிப்பிற்குப் பெயர் பெற்றவை. தரமான காலணிகள், அழகுமிகு கைப்பைகள், கைப்பெட்டிகள், பர்சுகள் முதலிய பலவகையான தோல் பொருள்கள் உங்கள் தேவைக்கேற்றவாறு கிடைக்கின்றன.



கிடைக்குமிடம் :

**Khadi Kraft**



## தமிழ்நாடு கதர் கிராமத் தொழில் வாரியம்

குறளகம், சென்னை 600 108

ARIES DIPR 509 83 TAM B

## 11

பத்மாவின் அறைக்கு மறுபடியும் தோட்டக்காரக் கிழவர் கன்னியப்பன் வந்தார். "சாரோட அம்மாவும் அப்பாவும் ஊர்லேர்ந்து வந்திருக்காங்களாம். உங்களைப் பார்க்கணுங்கறாங்களாம். உங்களால வர முடியலேன்னு அவுங்களை இங்க அழைச்சிக்கிட்டு வரலாமான்னு கேக்கறாரு."

பத்மாவுக்குத் 'திக்'கென்றது.

தன் பெற்றோரிடம் அறிமுகம் செய்வதற்குத்தான் என்னைத் திருமண ரிஸப்ஷனுக்கு அழைத்திருக்கிறார்!

மீண்டும் அவள் இதயம் பரபரப்படைந்தது. என்னை எதற்காக அவர்கள் பார்க்க வேண்டுமென்கிறார்கள்? ராம் என்னைப்பற்றி அவர்களிடமெல்லாம் சொல்லி விட்டாரா? என்ன சொல்லியிருப்பார்? பின்னை சொன்னதை வைத்து அவர்கள் ஒரு வித்தியாசமான பத்மாவை மனத்தில் கற்பனை செய்து வைத்திருந்தால் நேரில் என்னைப் பார்த்ததும் ஏமாற்றமடைய மாட்டார்களா?

எதற்காக அவர்களிடம் என்னை அறிமுகம் செய்கிறார்? பெற்றோரின் அபிப்பிராயத்தைக் கேட்கவா? அவர்கள் என்னைப் பற்றி ஏதாவது குறைத்துச் சொன்னால் ராமின் மனம் மாறிவிடுமோ? என்னை அவர் கத்தரித்து விடுவாரோ?

பயத்திலும் குழப்பத்திலும் அவள் மனம் தத்தளித்தது.

எப்படியிருந்தாலும் ஜுரம் என்று பொய் சொல்லிப் பெரியவர்களை இந்த ஹாஸ்டலுக்கு வரச் சொல்லுவது மரியாதையாகுமா? நடப்பதெல்லாம் நடக்கட்டும். போய்ப் பார்த்து விடுவோம். கற்பனைகளை அவர்கள் அதிகம் வளர்த்துக் கொள்ளுவதற்குள் நிஜமான பத்மாவை அவர்கள் தெரிந்து கொள்ளட்டுமே. பயந்து பயந்து வாழ்க்கையில் என்ன கண்டோம்?

"வர்றேன்னு சொல்லுங்க தாத்தா."

கன்னியப்பன் சென்றதும் அவசர அவசரமாகப் புறப்பட ஆரம்பித்தாள். வேறு வழியின்றிப் பெட்டிக்குள்ளிருந்து கவகாம்பர நெலக்ஸையும் வெள்ளை நாக்கெட்டையும் எடுத்தாள். ஜன்னலருகே எடுத்துச் சென்று வெளிச்சத்தில் பிடித்துப் பார்த்தாள். அழுக்காக இல்லை. லேசாகக் கசங்கித்தான் இருக்கிறது. அணிந்து கொண்டால் ஒன்றும் தெரியாது.

தேர்வடம் போல் சித்தி இந்த வயதில் எவ்வளவு நகைகளைச் சுமந்து கொண்டிருக்கிறாள். எனக்கு நூல் போல ஒரு சங்கிலியைத் தரக்கூட மனமில்லையே. அப்பா இருந்திருந்தால் இந்நேரம் என்னை எப்படியெல்லாம் அலங்கரித்துப் பார்த்திருப்பார். இந்தக்கவரிங் நகைகளை அணிய விடுவாரா? வெறுத்துச் சுயரூபத்தைக் காட்டிக்கொண்டிருக்கும் இந்த நகைகளை அணிந்து செல்வதை விடக் காதையும் கழுத்தையும் காலியாக வைத்துக் கொண்டு போவதே மேல்.

கையில் எடுத்த ஃபான்ஸி தோடு, சங்கிலி, வளையல்களைத் தூக்கிப் போட்டாள்.

பக்கத்து நெடுஞ்சாலையில் இருந்த பஸ் ஸ்டாப்பை அவள் அடைந்த போது மணி 5.25. நல்ல வேளையாகத் தெரிந்த கல்லூரி முகங்கள் கண்ணில் படவில்லை. ராம் வந்து இந்த இடத்தை விட்டு நகரும்வரை தெரிந்தவர்கள் யாரும் வராமலிருக்க வேண்டும் என்று அவள் மனம் அடித்துக்கொண்டது. ராமின் ராஜ்தூத் பைக்கின் சப்தத்திற்காக அவள் செவிகள் காத்திருக்கத் தொடங்கின.

இரண்டு நிமிடங்கள் கூட அவள் நின்றிருக்க மாட்டாள். அவள் முன்னே ஒரு



# நேசமுள்ள வான்சுடரே

புதிய வெள்ளை ஃபியட் ஓசையின்றி வந்து நின்றது. முன்பக்கக் கதவை அவளுக்காகத் திறந்து வரவேற்றது.

உள்ளே ஸ்டீயரிங் வளையத்தின்மேல் வலக்கரத்தைப் போட்டு அமர்ந்திருந்த ராம் இருண்ட நிறத்தில் 'டீ ஷர்ட்' போல அணிந்து அதிகச் செப்பாக மிளிர்ந்தான். ''குட் ஈவினிங்'' என்றான்.

பத்மா யாரும் பார்த்து விடக்கூடாது என்று, தாமதிக்காமல் காருக்குள் ஏறினாள். பயமும் ஒருவிதக் குற்ற உணர்வும் அவள் இதயத்தின் பெரும் பகுதியை ஆக்கிரமித்தன. முன் சீட்டின் மென்மைக்குள் அவள் அமிழ்ந்த போது, ''தாங்க் யூ பத்மா. உடம்புக்கு என்ன?'' என்று கேட்டான். கார் சீறிப் பாய்ந்தது.

அவள் பக்கத்துக் கதவை அவள் சரியாக அடைக்கவில்லையென்பதை உணர்ந்த ராம் தன் கரத்தை நீட்டிக் கதவைத் திறந்து பலமாக இழுத்துச் சாத்தினான். அப்போது அவள் புடவை விளிம்பில் அவன் கரம் லேசாக உரச, குறைந்த வோல்டேஜ் மின்சாரம் பட்டதைப் போன்ற சிலிர்ப்பைத் தலையிலிருந்து பாதம் வரை பத்மா அனுபவித்தாள். அவனிடமிருந்து பரவிய நறுமணம் அவளுக்கு ஒருவித மயக்கத்தை ஏற்படுத்தியது.

''ஃபீவரிஷ்ஷா இருந்தது.''

''மெடிகல்ஸ்டூடன்ட்சுக்குத் தலைவலி ஜுரமெல்லாம் வரக் கூடாதே?''

டெய்சி அல்லது வேறு யாராவது இப்படிச் சொல்லியிருந்தால், 'மெடிகல் ஸ்டூடண்ட்ஸ் என்ன தெய்வப் பிறவிகளா?' என்று கேட்டிருப்பாள். ஆனால் ராமின் அருகே அவள் ஏனோ பேசும் சக்தியை இழந்து விடுகிறாள். பதில் எதுவும் சொல்லாமல் நாணத்துடன் புன்னகை செய்தாள்.

உடனே ராம் ''அப்படீன்னு நான் சொல்லலே, டாக்டர் ரங்காச்சாரி சொல்லியிருக்கார்'' என்றான். ''உங்களை டிஸ்டர்ப் பண்ணியிருக்க மாட்டேன். அப்பாவும் அம்மாவும் நாளைக்கு டில்லிக்குப் போயிடறாங்க. அதுக்குள்ளே உங்களைப் பாக்கணும்னு ஆசைப்பட்டாங்க. ஸெமினாருக்கு பிரிபேர் பண்ணிட்டீங்களா?''

''கார்டியாக் ரிதம் ரெஃபர் பண்ணணும். பிரிட்டிஷ் கவுன்சில்ல இருக்குன்னு டெய்சி



சொன்னா. நானேக்குத்தான் போகணும். இப்ப எங்கே போறோம்?''

''சாந்தோம்.''

''அங்கதான் ரிஸப்ஷனா?''

''ரிஸப்ஷன் ஆபட்ஸ்பரியில். உங்களுக்கு ஜுரமா இருக்கிறதினாலே இப்ப நாம அங்க போகல. நேரா வீட்டுக்குப் போறோம்.'' என்றான். வேகத்தை அதிகப் படுத்தி முன்னால் சென்ற பஸ்ஸை லாகவமாக ஓவர்டேக் செய்து விட்டு, ''எங்களுக்கு சாந்தோம்ல ஒரு வீடு இருக்கு. அப்பா அம்மா மெட்ராஸ் வந்தா அங்கதான் தங்குவாங்க'' என்றான்.

''உங்க அப்பா அம்மாகிட்ட என்னைப் பத்தி என்ன சொல்லியிருக்கீங்க?''

''பத்மான்னு ஒரு பொண்ணு என் கிளாஸ்ல படிக்கிறா. கருப்பா குச்சி மாதிரி அசிங்கமா இருப்பா. அனாடமி தியேட்டர்ல பிணத்தைப் பார்த்துட்டு மயங்கி விழுந்துட்டா. ஆனா ஒண்ணரை வருஷத்துக்குப் பிறகு அனாடமியில அவதான் கிளாஸ்ல ஃபர்ஸ்டா பாஸ் பண்ணினா. நல்லா படிக்கறோம், நிறைய மார்க் வாங்கறோம்னு அவளுக்குத் தலைக்கனம் ஜாஸ்தி.....''

''அவ்வளவுதானா?''

''இன்னும் நிறையச் சொல்லியிருக்கேன். இல்லேன்னா உங்களைப் பாக்கணும்னு அவசரப் படுவாங்களா?''

''சரி சொல்லுங்க'' என்றான் புன்னகையுடன்.

''சரியான பொறாமைக்காரி. எல்லாரும் ஃபெயிலாகணும் தான் மட்டும் பாஸ் பண்ணணுங்கற கெட்ட எண்ணமெல்லாம் ரொம்ப உண்டு. சிடுமூஞ்சி...''

''அப்புறம்?''

''மூக்கில சிரிப்பையே பார்க்க முடியாது. யார்கிட்டயும் சரியாப் பேச மாட்டா.''

பத்மா சிரித்தாள். ''என்னைப் பத்தி நீங்க எப்படியெல்லாம் மனசிலே நினைச்சிருக்கீங்கன்னு இப்ப தெரிஞ்சுப் போச்சு'' என்றாள்.

காரை ஸிக்னலுக்காக ராம் நிறுத்தினான். சாலையை ஒரு கும்பல் கடந்தது. சித்தி, சித்தப்பா இப்போது பார்த்தால் என்ன நினைப்பார்கள் என்று பத்மா ஒருகணம் குழம்பினாள். ஸ்டீயரிங்கில் தன் இருகரங்களையும் ராம் பதித்துக் கொண்டு பத்மாவைத் திரும்பிப் பார்த்துப் புன்னகை செய்தான். எண்ணெய்க் குளியலால் சுத்தமாகக் கழுவப் பட்டிருந்த அவளுடைய கூந்தல் அடர்த்தியாகவும் கதுப்பாகவும் பட்டுப் போலவும் சாய்வாகச் சொரிந்த மாலைவெய்யிலில் மினுமினுத்தது. பகலில் அறைக்குள்ளேயே தங்கி அவள் ஓய்வெடுத்திருந்ததால் முகம் பொங்கியிருந்தது. விளைந்து கனிந்திருந்த அவள் இதழ்கள் ரோஜா நிறத்தில் மின்னின.

பொட்டு நகைகூட இல்லாமல் எந்த ஒப்பனையும் இல்லாமல், செயற்கையின் தீண்டல் சிறிதுமின்றி மிக எளிமையாகக் கள்ளம் கபடமற்ற தேவதை போல அமர்ந்திருந்தவளின் அழகை ராம் பார்வையால் ஸ்பரிசித்தான். பத்மா, ரத்தம் 'குப்'பென்று தலைக்கேறியதைப் போல ஒருவித கதகதப்பை முகத்தில் உணர்ந்தாள்.

''நான் உங்களைப் பத்தி என்ன நினைக்கறேங்கறதை உங்ககிட்ட சொல்லிடணும்னு ரெண்டு வருஷமாத் துடிச்சுக்கிட்டிருக்கேன், பத்மா. சொல்றதுக்கு நேரம் வரல. சீக்கிரமே வரும்னு நம்பறேன்'' என்றான்.

பத்மாவின் இதழ்கள் மெல்ல நெளிந்து ஏதோ ஒரு வார்த்தைக்கு வடிவம் தர முயன்றன. அப்புறம் ஏனோ தயங்கிச்சொல்ல வந்ததை விழுங்கி விட்டாள்.

ஸிக்னலில் பச்சை விழவே கார் மறுபடியும் சீறிக் கிளம்பியது. லஸ் பக்கமாக விரட்டினான். கைக்கடிகாரத்தைப் பார்த்தான். ''ஸிக்ஸுக்குள்ளே போயிட்டா அம்மாவையும் அப்பாவையும் வீட்டிலேயே பாத்துரலாம்.''

அம்மா அப்பா என்று ராம் சொன்னபோதெல்லாம் பயம் அவள் மனத்தைத் தாக்கியது.

சாந்தோம் மாதா கோவிலின் எதிரே வலமாக ஓடித்தான். அரை பர்லாங் சென்று இடப்புறமுள்ள சந்துக்குள் திருப்பினான். தெருவில் விளையாடிய அழுக்குச் சிறுவர்கள் காருக்கு வழிவிட்டு விலகி இருபக்கமும் நின்று சலாமடித்தார்கள், ராம் பதிலுக்கு அவர்களுக்குப் புன்னகையுடன் சலாமடித்தான். சமுத்திரத்தின் கருநீலப்பரப்பு அடிவானத்தில் எழும்பியது.

**ஷெரில்**

என்னதான் ஐந்து நட்சத்திர ஹோட்டலின் வரவேற்பில் நின்று கொண்டு வருபவர்களை உபசரித்தாலும் மாடலிங்கில் கிடைக்கிற சந்தோஷம் வருமா என்று வண்ணப் படத்தில் இருக்கும் ஷெரிலுக்குத் தோன்றி இருக்க வேண்டும். நட்சத்திர ஹோட்டல் வேலையை விட்டு விட்டு மாடலிங் செய்கிறார். அவ்வப்போது சின்னச் சின்ன மாடலிங் செய்து கொண்டிருந்தாலும், பெரிய அளவில் பெயரும் புகழும் குவிக்கிற மாதிரி மாடலிங் செய்ய வேண்டும் என்று ஆசையாம். அட்டையில் சாத்துக் கொண்டிருக்கிறார்.

-கோபு ராமஸ்வாமி



வண்ணப்படம்: ஏ. வீ. பாலன்



சென்னை A. R. V. இன்டஸ்ட்ரீஸ் பாகஸ்தர் ஸ்ரீ R. V. ராகவன் அவர்களின் குமாரி சௌபாக்கியவதி இந்திராவுக்கும் சென்னை சூபர் டிரேட்ஸ் மானேஜிங் பாகஸ்தர் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அவர்களின் குமாரர் சிரஞ்சீவி ஸ்ரீநிவாஸனுக்கும் 6-6-1983 அன்று சென்னையில் சிறப்பாக திருமணம் நடந்தது.

சௌபாக்கியவதி இந்திரா B.Sc.,
சிரஞ்சீவி ஸ்ரீநிவாஸன் B.A.,



திருத்தணி முருகன் திருக்கோயில் நிர்வாக அதிகாரியும் அற நிலையத்துறை உதவி ஆணையருமான திரு த. நாகராஜன் பி.எஸ்.சி. அவர்களின் ஏக புதல்வர் திரு நா. மதிவாணன் பி.எஸ்.சி.(க்கும்) சென்னை அண்ணா நகர் டாக்டர் திரு த. சரவணமுத்து எம்.பி.பி.எஸ். அவர்களுடைய மகள் செல்வி ச. இராஜலெட்சுமி (பி.எஸ்.சி.)க்கும் சமீபத்தில் திருத்தணியில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு திரு ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் மணமக்களை வாழ்த்தி அஞ்சல் மூலமாக பிரசாதம் வழங்கியதுடன், திருப்பதி செல்லும் வழியில் இங்கு விஜயம் செய்தபோது மணமக்களை நேரிலும் ஆசீர்வதித்தார்.

வாழ்க மணமக்கள்.

ராம் காரை நேராகச் செலுத்திக் கடைசியாக இருந்த நவீன மஞ்சள் பங்களாவின் அருகே வேகத்தைக் குறைத்தான். பங்களாவின் நெற்றியில் செந்நிற ஓடுகள் அழகுக்காகப் பதிக்கப்பட்டிருந்தன.

'கேட்'டை ஒருவன் திறந்துவிட ராம் பங்களாவுக்குள் திருப்பினான். மலர்வெள்ளத்தில் மிதந்த கார் போர்ட்டிகோவை அடைந்து நின்றது.

கார்க் கதவைத் திறப்பது எப்படியென்று தெரியாமல் பத்மா உள்ளே இருந்த கைப்பிடியை மேலும் கீழுமாக அசைத்தாள். வெட்கம் பிடுங்கித் தின்றது. ராம் அவளுடைய அவஸ்தையைப் புரிந்து கொண்டு கதவைத் திறக்க அவளுக்கு உதவி செய்தான். அவளுடைய தயக்கத்தையும் இக்கட்டான நிலைமையையும் உணர்ந்தவன் ''அம்மா பயப்படாம இறங்குங்க உங்களைப் பத்தி நல்லபடியாத்தான் சொல்லியிருக்கேன்'' என்றான்.

இருவரும் காரிலிருந்து வெளிப்பட்டனர். வராந்தா படியில் ஏறினர். சற்றுமுன் 'கேட்'டைத் திறந்து விட்ட இளைஞன் பத்மாவைப் பார்த்துக் கும்பிட்டான்.

ராம் ''யார் தெரியுதா, நம்ப கன்னியப்பனோட ஸன்'' என்றான்.

கர்ட்டனை விலக்கிக் கொண்டு உள்ளே நுழைந்தபோது பிரம்மாண்டமான ஹாலின் உள் அலங்காரங்கள் பத்மாவுக்குப் பிரமிப்பையூட்டின.

சுவருக்குச் சுவர் பரவியிருந்த தரைவிரிப்பின் மென்மையில் அவள் பாதங்கள் ஆழமாகப் பதிந்தன. உயரத்தில் ஷாண்டலியர் விளக்கு சுடர் விட்டு எரிந்தது. ஒரு பக்கத்துச் சுவர் முழுக்கப் பனிமூடிய ஆல்ப்ஸ் மலைத்தொடர். ஹாலில் யாருமில்லை.

''வா பத்மா'' என்று தயங்கியவளை அழைத்தான். ஒரு ஜன்னலை மறைத்துத் தொங்கிய வெனீஷியன் ப்ளைண்ட் அருகே அழைத்துச் சென்று கயிற்றை இழுத்தான். நீளநீளமாக இடைவெளிகள் ஏற்பட பத்மாவின் முகத்தில் கடற்காற்று மோதியது. வெளிப்பக்கம் ரூஃப் கார்டன் போல பூச்செடிகளுக்கு மத்தியில் மேஜை நாற்காலிகள் கிடந்தன. தொலைவில் கடல் அலையடித்துக் கொண்டிருந்தது. ''இன்னிக்கு டின்னர் நமக்கு இங்கேதான். நானும் கிளப்புக்குப் போகப் போறதில்லே'' என்றான்.

காலடிச் சப்தமும் பேச்சுக் குரலும் கேட்கவே இருவரும் திரும்பி அண்ணாந்து மாடிப்படியைப் பார்த்தனர். (தொடரும்)

# திருமணத்துக்கு நுழை வாயில்!

''துணை வேண்டுமான பெற்றோர்களே! மகனுக்கு உகந்த மணமகளா? மகளுக்கு உகந்த மணமகனா? நேரில் கலந்து பேசி இன்றே முடிவு செய்து கொள்ளுங்கள் — அரிய வாய்ப்பு'' என்று நுழைவாயிலில் தோரணம் வரவேற்றது. உயர்ந்த நன் நோக்குடன் சிறப்பாக நடந்த இந்த மணமக்கள் தேர்வு முகாமில் ஒரு வேடிக்கை அனுபவம்; ஒரு ஏக்க உணர்வு:

## நழுவினர்!

வார இதழ்களில் எழுதிக் கொண்டிருக்கும் ஒரு சுதந்திரமான பத்திரிகையாளர், மணமகள் பகுதியிலுள்ள ஒரு பெண்ணை அணுகிப் பேட்டி காண விரும்பினார். தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டு ''மணமகன் குறித்து உங்கள் எதிர்பார்ப்பு என்ன?'' என்று கேட்க சற்றுத் தள்ளி யாரிடமோ பேசிக் கொண்டிருந்த தன் அம்மாவைக் காட்டி ''கொஞ்சம் இருங்கள் — அம்மா வரட்டும்'' என்று அந்தப் பெண் சொல்ல, இவரும் சரிதான் பத்திரிகைப் பேட்டிக்கு மணப் பெண் தயங்குகிறாள் போலும் என்று நினைத்து அம்மாவுக்காகக் காத்திருந்தார். அம்மா வந்ததும் மீண்டும் தனது அறிமுகப்படலத்துடன் நிருபர் பேச ஆரம்பிக்க, ''உங்க அம்மா அப்பா யாரும் வரலியா? ஜாதகம் கொண்டு வந்திருக்கிறீர்களா?'' என்று மணப் பெண்ணின் அம்மா நிருபரைக் கேட்க ஆரம்பித்ததும், நிலைமையின் விபரீதத்தை உணர்ந்துகொண்ட நிருபர் சத்தமில்லாமல் அங்கிருந்து நழுவிவிட்டார்.



## காயப்பட்டதா?

நிறையப் படித்து நல்ல வேலையில் இருக்கும் பெண்களுக்கே மதிப்பு அதிகம் இருந்தது. சன்னமான ஓரிரு நகைகளுடன் மெல்லிய அலங்காரத்துடன் சிலரும், வைர நெக்லஸ், பட்டுப் புடவை என்று ஏராளமான அலங்காரத்துடன் பலரும் வந்திருந்தனர். எளிமையாகத் தோற்றமளித்த சில பெண்களின் குடும்ப பொருளாதாரச் சூழ்நிலை மேலோட்டமான பார்வையிலேயே தெரிந்தது. திருமணத்துக்காக இந்தப் பெண்களை யாரும் அணுகாதபோது இவர்கள் இதயம் காயப்படாதா? இதை ஏன் சங்கம் நினைத்துப் பார்க்கவில்லை?

கே. விஜயகுமார்

புகைப்படம்: மூர்த்தி

நிலையாளர் சந்திரசேகரின் தொலைக்காட்சி பேட்டி.

அரசு
அபிவிருத்தி
திட்டங்களுக்கு
உங்கள் பங்கு
என்ன ?

இதோ

# தமிழ்நாடு அரசு பரிசு சீட்டு திட்டம்

உங்களுக்கு அரிய
வாய்ப்பு அளிக்கிறது!

இன்றே தமிழ்நாடு அரசு
சிறப்புக் குலுக்கல்
பரிசு சீட்டு வாங்குங்கள்!
பரிசு பெறுங்கள்!!
அரசிற்கும் உதவி புரியுங்கள்!!!

சிறப்பு முதல் பரிசு

# ரூ. 10 லட்சம்







சிறப்பு இரண்டாவது பரிசுகள் ரூ. 1 லட்சம் வீதம் மூன்று
மற்றும் ஆயிரக்கணக்கான பரிசுகள்

குலுக்கல் நாள் 20-7-83
இடம் : கோயமுத்தூர்
சீட்டின் விலை ரூ. 2

பரிசு திட்டத்தில் கிடைக்கும் வருமானம் சாலை அமைத்தல், பள்ளிகள் கட்டுதல், குடிதண்ணீர் வசதி போன்றவைகளுக்கு பயன்படுத்தப்படுகிறது.



தமிழ்நாடு பரிசுச்சீட்டு இயக்குநர்
அரசினர் தோட்டம், சென்னை-600 002

DIPR-304-EP




# இன்று

# சோழா ரொக்க சர்ட்டிபிகேட்டுகள்

கடந்த கால நலன்களை எதிர்கால ஆதாயம் ஆக்கிட
பாங்க் ஆப் தஞ்சாவூர் 1983 ஜூலை 1 முதல்
அறிமுகப் படுத்திடும் புதிய திட்டம் இது.

மக்களுக்கு நற்பயன் அளித்திட, அவர்கள் சௌகரியமாகச்
சேமித்திட — பெருமளவுக்கு ஆதாயம் கண்டிட —
நிர்ணய அளவு காலங்களுக்கு உரிய சமயத்தில்
நிச்சய உதவி பெற்றிட வகை செய்திடும்
புகழ் மிக்கதோர் திட்டம், "சோழா" ரொக்க சர்ட்டிபிகேட்டுகள் திட்டம்.

இந்த "சோழா" ரொக்க சர்ட்டிபிகேட்டுகள்

- பல்வேறு தொகையளவுகளுக்குக் கிடைக்கின்றன.
- 3 மற்றும் 5 ஆண்டு கால அளவுகளுக்கு அளிக்கப்படுகின்றன.
- கவர்ச்சிகரமான கூட்டு வட்டி கிடைத்திடும்.
- உரிய காலம் முடிந்ததும், ஒருமொத்தமாகத்தொகை வழங்கப்படும்.

சோழா ரொக்க சர்ட்டிபிகேட்டுகள் வாங்கிடுவீர் —
அவை கூட்டு வட்டி கிடைத்திடும் நல்ல முதலீடாகும்.




## பாங்க் ஆப் தஞ்சாவூர் லிமிடெட்,

பதிவு அலுவலகம் : 1087, மிஷன் வீதி, தஞ்சாவூர்-613001
தமிழ்நாடு.

S. சொக்கலிங்கம்,
ஜெனரல் மானேஜர்

B.K. மாதவன்,
சேர்மன்.

# மணி மகுடம் தரும் தலைவலி

வீரேந்தர் அனந்த்

இந்தியா சுதந்திரம் அடைந்த நாளிலிருந்தே பாரத தேவியின் மணி மகுட மாநிலமான ஜம்மு-காஷ்மீர் தலைவலியாகவே இருந்து வந்திருக்கிறது!

அஸ்ஸாமில் ஆயிரக் கணக்கில் படுகொலைகள் நடந்து ஒரு தேர்தலை நடத்தி முடித்த சில மாதங்களிலேயே ஜம்மு காஷ்மீர் தேர்தல். அஸ்ஸாம் அளவுக்கு இல்லாவிடினும் இங்கும் வன்முறை, பதற்ற நிலைகளுக்குக் குறைவில்லை.

தேர்தலின்போது அரசாங்கமே எல்லா மார்க்கெட்டுகளையும், சிறிய வியாபாரக்கடைகளையும்கூட முழு நாள் மூடிவைக்கும்படி மாநிலம் முழுமைக்கும் உத்தரவு போட்டிருந்தது. அன்று போக்குவரத்து வசதிக்குப் பொது பஸ்கள் கூட சாலையில் விடவில்லை.

இத்தனைக்கும் தேர்தலைக் கவனிக்க 31 பார்வையாளர்கள் வந்தனர். மாநிலத் தேர்தல் அதிகாரியுடன் தலைமைத் தேர்தல் அதிகாரியின் முகாம் வேறு. மத்திய ரிசர்வ் போலீஸ், எல்லைப் பாதுகாப்புப் படை, மாநிலப் போலீஸ் இப்படி சுமார் 20,000 காவலர்கள் கொண்ட கண்காணிப்பு. இவர்களுக்கான ஒருங்கிணைந்த கண்ட்ரோல் அறை.

'தேர்தலா? தெருச் சண்டையா?' என்கிற அளவுக்கு அன்றே பல இடங்களில் மோதல். தேர்தல் அறிவிப்பு வந்த நாளிலிருந்தே மாநிலம் முழுக்கப் பதற்ற நிலை. பள்ளத்தாக்குப் பகுதிகளில் தீவைப்பு, வன்முறை வெறியாட்டம், தெருச் சண்டைகள். அடிதடி காயங்கள். குண்டர்கள், ரௌடிகளின் ஆட்டங்கள்.

✖ பரூக் அப்துல்லா.



இவ்வளவுக்கும் இடையே தேர்தல் தினத்தன்று சுமார் 60 சதவித வாக்கு பதிவாகியுள்ளது.

ஒரு தொகுதியில் 15 வாக்குச் சாவடிகளைக் கைப்பற்றியுள்ளதாக இந்திரா காங்கிரஸ் புகார் செய்துள்ளது. மோதல் காரணமாகச் சோனுவர் ஓட்டுச் சாவடியில் வாக்குப் பதிவு நிறுத்தப்பட்டது. அங்கே மொத்தம் பதிவாகிய வோட்டுக்கள் ஐம்பது மட்டுமே. ஒரு ஓட்டுச் சாவடியில் வாக்காளர் பட்டியலில் பலருடைய பெயர்களே இல்லை.

''தேர்தலில் தில்லுமுல்லு நடந்ததால் 7 தொகுதிகளில் மறு தேர்தல் நடத்த வேண்டும். மறு தேர்தலுக்கு உத்தரவிடாவிட்டால் பதிவான வோட்டுக்களைப் புறக்கணிப்போம்'' — மகஜர். அதனால் ஓட்டு எண்ணிக்கை நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது.

பாரமுல்லா நகரில் உள்ள வாக்குச் சாவடி ஒன்றில் ஆறு ஓட்டுப் பெட்டிகளை உடைத்ததைக் கையும் களவுமாகப் பிடித்தனர். உடந்தையாக இருந்த அதிகாரிகளையும் கட்சித் தொண்டர்களையும் பத்தாயிரத்துக்கு மேற்பட்டவர்கள் முற்றுகை.

எப்படியோ தேர்தல் முடிந்து விட்டது. தேசிய மாநாட்டுக் கட்சி மெஜாரிட்டியைப் பெற்று டாக்டர் பரூக் அப்துல்லாவே முதலமைச்சராகியுள்ளார். சில மாதங்களுக்கு முன் இதய பூர்வமாக பரூக் அப்துல்லாவை முதலமைச்சராக ஆக்குகிறேன் என்று எந்த இந்திரா காந்தி கூறினாரோ அதே இந்திரா காந்திதான் எந்த மாநிலத் தேர்தலுக்கும் செலவிடாத அளவுக்குப் பல நாட்கள் அங்கேயே தங்கி தேசிய மாநாட்டுக் கட்சியை ஒழித்துக் கட்டி இந்திரா காங்கிரஸ் கொடியை நாட்ட வேண்டும் என்று பாடுபட்டார். ஆட்சிக்கு இந்திரா காங்கிரஸ் வரமுடியவில்லை என்றாலும் அக்கட்சிக்கு தேர்தல் முடிவு வெற்றிதான். முன்னை விடக் கணிசமான அளவில் வெற்றிகளைக் குவித்திருக்கிறது.

ஆனால் ஜம்முவில் பலம் வாய்ந்த கட்சியாக இருந்த பாரதிய ஜனதா ஒரு இடத்திலும் வெற்றி பெறவில்லை. இதுவே இந்திரா காங்கிரசுக்கு வெற்றிதானே!

இந்தத் தேர்தலில் பாரதிய ஜனதா இரண்டாகப் பிளவுபட்டது. அதுமட்டுமல்ல, இந்திரா காங்கிரஸ் வேட்பாளர்களுக்கு எதிராக இ. காங்கிரஸாரே போட்டி விட்டனர். அதே போல் தேசிய மாநாட்டுக் கட்சியிலும் இந்தப் பிளவுகளினாலேயே வன்முறை வளர்ந்திருக்கிறது.

இந்தத் தேர்தலில் காயப்பட்டவர் எண்ணிக்கை ஆயிரக் கணக்கில் இருக்கலாம். பணம் தண்ணீராக இரண்டு கட்சிகளிலும் விளையாடியிருக்கிறது. ரத்தமும் தண்ணீராக ஓடியிருக்கிறது.



இரவிசம்



நாகசாமி



சால்வடார் ராணுவ வீரரும் அமெரிக்கப் பத்திரிகையாளரும் -(வலது)

○ எம். ராஜேந்திரன், லால்குடி ★

? இதுவரை 300 வேடங்களில் நடித்துவிட்டேன்; இந்த முதல் மந்திரி வேடம் 301வது வேடம் என்று என். டி. ஆர். கூறலாமா?

! சொல்லலாம். இந்த அர்த்தத்தில்: வேடங்களைக் களைந்தது போல இந்த முதல் மந்திரி பதவியையும் எப்போதும் துறக்கத் தயாராக இருப்பேன்; பற்றுதல் வைக்க மாட்டேன். வேடங்களை ஏற்று என் முழு ஆற்றலையும் செலுத்தி நடித்து நற்பெயர் வாங்கியது போல் இந்தப் பதவியில் இருக்கும்போதும் வஞ்சனை இன்றி மனப் பூர்வமாய் உழைப்பேன்.

○ கு. கணேசன். சென்னை-15

? காஞ்சி முனிவரை ஏற்றி, கருணாநிதியைப் போற்றும் தங்களுக்கு காஞ்சி காமகோடி என்பதற்குக் கருணாநிதி கூறும் விளக்கம் ஏற்புடையது தானா?

! நானே . என்னகருணாநிதியிடம் தலையைக் கொடுத்துவிட்ட தஞ்சாவூர்ப் பொம்மை என்ற எண்ணமா உமக்கு? உங்களைச் சொல்லிப் பயனில்லை ஸார்! பொதுவாகவே நம் மக்கள் உங்களைப் போல் தான் இருக்கிறார்கள். ஆதரித்தால் ஒரு தலைவர் என்ன செய்தாலும் புகழ வேண்டும். தாக்கினால் ஒரு தலைவர் என்ன சொன்னாலும் எதிர்க்க வேண்டும். சங்கராச்சாரியாரைப் போற்றி மூகாம்பிகை கோயிலுக்கும் போகும் எம். ஜி. ஆரைக் கல்கி ஏன் தாக்கி எழுதுகிறது என்று பல அ. தி. மு. க தொண்டர்கள் வியப்புடன் வினவுகிறார்கள். தலைவர்கள் பரப்புகின்ற மாயப் பிரமையில் சிக்காமல் பிரச்னைகளைத் தனித் தனியே பார்த்து சுயமாய்ச் சிந்தித்து ஒவ்வொன்றையும் எடைபோட நாம் எல்லோரும் எப்போது கற்றுக் கொள்கிறோமோ அப்போதுதான் அரசியல்வாதிகளால் ஏமாற்றப்படாமல் இருப்போம். அன்றுதான் மெய்யான மக்கள் ஆட்சி மலரும்.

○ எஸ். ஸ்ரீநிவாச ராகவன், ஸ்ரீவில்லிபுத்தூர்

? இதய பூர்வமான நன்றி என்று கூறுவது எப்படிப் பொருந்தும்? மூளைதானே விருப்பு வெறுப்பைக் காட்டுகிறது. இதயத்துக்கு இரத்தத்தைப் பாய்ச்சுவதுதானே வேலை?

! இதயம் அல்லது இருதயம் என்ற சொல்லுக்கு மனம் (Mind)என்ற பொருளும் உண்டு.

○ வெ. வைத்தியநாதன், கங்காதரபுரம்

? தினந்தோறும் புதுப் புதுக் கருவிகள் தோன்றிக்கொண்டிருக்கின்றன. சில அடிப்படைக் கருவிகளையாவது எப்படிப் பயன்படுத்துவது என்று நம் குழந்தைகளுக்குக் கற்றுத்தர அரசு ஏற்பாடு செய்யுமா?

! சுதந்திரம் பெற்று 36 ஆண்டுகள் ஆகியும் நாம் இன்னமும் மெக்காலே கல்வித் திட்டத்தைக் கட்டிக் கொண்டு அழுவதையும் குமாஸ்தா பட்டாளங்களை உருவாக்கிக் கொண்டிருப்பதையும் கட்டிக் காட்டி வருத்தப்பட்டிருக்கிறார் என்.டி.ஆர். ஆக உங்கள் கேள்விக்குச் சாதகமான ஒரு பதிலை ஆந்திரமாவது அளிக்குமா — கூடிய சீக்கிரம் என்று காத்திருந்து பார்ப்போம்.

○ கே. தேவநாதன், மதுரை-13

? எம். ஜி. ஆருக்கு எதிராக பாட்னா பத்திரிகை ஆசிரியர்கள் போர்க் கொடி தூக்கியுள்ளது பற்றி....?

! பாட்னா மட்டுமல்ல, புதுதில்லியும்தான். அண்மையில் இந்துஸ்தான் டைம்ஸ் தலையங்கம் ஜனநாயக மரபுகளைப் போற்றாத எம். ஜி. ஆர். மாநிலங்களுக்கு அதிக சுயாட்சியைக் கோருவது ஆபத்தானது என்று எடுத்துக் காட்டியுள்ளது. பத்திரிகைகள் கட்டுப்பாடு சட்டத்தை ஆராய அமைக்கப்பட்ட குழுவில் எல்லாரும் இந்தச் சட்டமே தேவையில்லை ஏற்கனவே உள்ள சட்டங்களே போதும் என்று கூறியிருக்கும்போது ஒருவர் மட்டும் இந்தப் புதிய சட்டம் தேவை என்று கூற அவருக்கு எம். எல். ஸி. பதவி வழங்கப்பட்டிருப்பதை வன்மையாகக் கண்டிக்கிறது. தமிழ் நாட்டில் நடப்பது போலீஸ் ஆட்சி என்று வர்ணிக்கிறது.

○ கே. ஆர். ஜனார்த்தனன், தஞ்சை

? தொல் பொருள் ஆய்வு இலாகா இயக்குனர் டாக்டர் நாகசாமி சஸ்பெண்ட் செய்யப்பட்டிருக்கிறாரே?

! தொல்பொருள் ஆய்வாளருக்கும் பொருளால் தொல்லை ஏற்படும் என்று புரிகிறது.

## நீங்கள் கேட்டவை - தராசு

# எல்ஸால்வடாரில் என்ன நடக்கிறது?

○ மோகன், திருக்காட்டுப்பள்ளி

? எல் ஸால்வடாரில் அப்படி என்ன வார் நடக்கிறது? என்னமோ அமர்க்களப்படுகிறதே?

! அங்கு ஆட்சியில் உள்ள அரசை எதிர்த்துக் கிளர்ச்சி. இந்தக் கிளர்ச்சியைத் தூண்டி புரட்சியாளருக்குக் கொரில்லாப் போர் முறைகளில் பயிற்சி அளிப்பது ருஷ்யா, கியூபா என்று அமெரிக்கா சொல்லுகிறது. இதைக் கட்டுப்படுத்த துருப்புக்களை அனுப்பா விட்டாலும் (வியட்நாம் போல) யுத்த தளவாடங்களையும் ஆலோசகர்களையும் பயிற்சியாளர்களையும் கொடுத்து உதவுகிறது. எல் ஸால்வடார், ஹொண்டுராஸ் ஆகிய நாடுகள் அமெரிக்காவுக்குத் தெற்கே அருகில் இருப்பதால் அமெரிக்காவுக்குப் பாதுகாப்பு பற்றிய கவலை. அண்மையில் அமெரிக்க ஆலோசகர் ஒருவர் ஸால்வடாரில் புரட்சியாளரால் படுகொலை செய்யப்பட்டார். எல்ஸால்வடாரில் புரட்சிக்கு அடிப்படைக் காரணம் நிலப் பிரபுத்துவம்தான். அதை நீக்கி நிலச் சீர்திருத்தம் செய்ய எல்ஸால்வடார் அரசை அமெரிக்கா வற்புறுத்துவதே பிரச்சினைக்குத் தீர்வு காணச் சிறந்த வழி.

○ தி. சந்திரசேகர், கோவை

? உடன் பிறப்புகள், ரத்தத்தின் ரத்தங்கள் ஒப்பிடுக.

! செவிக்கு இனிமையானது ஒன்று; கடுமையானது மற்றொன்று.

○ சிவானந்தம், திருச்சி

? தலைமைச் செயலராக விளங்கி அண்மையில் காலமான இரவிந்தைப் பற்றி நாளிதழ்களில் வராத ஒரு விஷயம் இருக்கிறதா?

! பட்டதாரி, ஆகஸ்டு போராட்டத்தில் சிறை சென்ற வீரர், கலப்புத் திருமணம் செய்து கொண்டவர், தமிழறிஞர், எழுத்தாளர், சிந்தனையாளர், பத்திரிகையாளர், சிறந்த நிர்வாகி, பண்பாளர், உழைப்பாளி ம்ம்ம்... நாளிதழில் சொல்லப்படாத விஷயம் என்ன....? ஆ! அவரது ஆய்வுத் திறன்! அது கல்வி நிலையச் சொற்பொழிவு நிகழ்த்துகையில் வெளிப்பட்டது. தேசியம் வளர்த்த தமிழ் என்ற தலைப்பில் நூல் வடிவாகியிருக்கிறது... இன்னும் ஒன்று... தமிழ்ச் சிறுகதைகள் பலவற்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார். நவீன தமிழ் இலக்கியம் சர்வதேச அந்தஸ்தைப் பெற வேண்டும் என்ற ஆர்வத்தோடு.

○ ஆர். ராமகிருஷ்ணன், பம்பாய்

? நாளுக்கு நாள் ஏறிவரும் விலைவாசியை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?

! உங்களைப் போல்தான்!

○ கே. சுப்பிரமணியன், நெசவாக்கம்

? காவி உடை உடுத்துத் துறவியாகி விட்டதாகக் கூறும் ஒருவர் அமைச்சுத் தொழில் புரிந்து மனைவி மக்களுடன் வாழலாமா?

! துறவு புறச் சின்னங்களைப் பொறுத்தது மட்டுமல்ல; மனப் பக்குவத்தை அடைய வேண்டும். ஜனகர் அரசுக் கட்டில் இருந்தபடியே துறவியாகப் பற்றற்ற வாழ்க்கை நடத்தியவர். ராஜாஜியும் அப்படியே. அவ்வாறே என். டி. ஆரும் இருக்க முயன்று வெற்றி பெற்றால் மாபெரும் சாதனையாளராகவும், வழி காட்டியாகவும் விளங்குவார்.

○ எஸ். ஏ. முகம்மது யூசுப், அதிராம்பட்டினம்

? பாண்டி மாவீனுஜனைக் கொலை செய்து கொள்ளையடித்த குற்றவாளியைப் பத்தே நாட்களில் கைது செய்த போலீஸ் படையைப் பற்றி....

! ரொம்ப சிம்பிள் கேஸ். போதாக் குறைக்கு பூக்காரி கனகாவின் துப்பு வேறு. பெருமைப்பட ஏதுமில்லை. போலீஸார் விடுவித்த மர்மங்களை மட்டுமின்றி விடுவிக்கப்படாத புதிர்கள் இன்னும் எத்தனை உள்ளன என்பதையும் பார்த்து அந்த அடிப்படையில்தான் திறமையைக் கணிக்க வேண்டும்.

---

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:

எம். இராஜேந்திரன்,
19, சன்னதி தெரு,
லால்குடி-621601

---



தீபம் நா. பார்த்தசாரதி அவர்களின் மூத்த குமாரத்தி சௌபாக்கியவதி பூரணி என்கிற பத்மாசினிக்கும், ஸ்ரீ நம்பெருமாள் அவர்களுடைய மூத்த குமாரன் சிரஞ்சீவி சம்பத்குமாரனுக்கும் (பாங்க் ஆப் இந்தியா) சென்னையில் மே மாதம் 29ம் தேதி வெகு விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. முகூர்த்தத்திற்கும், வரவேற்பிற்கும் மந்திரிகளும், பிரமுகர்களும், பத்திரிகாசிரியர்களும், எழுத்தாளர்களும் விஜயம் செய்து சிறப்பித்தனர். பாரதியின் கொள்ளுப் பேரன் ராஜ்குமாரின் 'பாரதி சங்கீத்' அனைவரது பாராட்டுதலையும் பெற்றது. வாழ்க மணமக்கள்.

## இலக்கிய சர்ச்சையா?

● ஹேமா ஆனந்த தீர்த்தனின் உள்ளக் குமுறலையும், கோவி. மணிசேகரனின் ஆறுதலையும்(?) கண்டேன். கோவி. மணிசேகரன் இவைகளை 'ஸ்போர்ட்டிவ்'வாக எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கூறுகிறார். எழுத்தாளனின் எழுத்தை விட்டு விட்டு உணர்வுகளைச் சுண்டுவதை எப்படி 'ஸ்போர்ட்டிவ்' வாக எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கோவி. மணிசேகரன் கருதுகிறார்? அல்லது இத்தகைய கேள்விகள் எப்படி இலக்கியச் சிந்தனைகளோடு ஒத்துப் போகிறதென்பதை இவர் விளக்குவாரா?

இதே மணிசேகரன் 'சாவி' இதழில் இவரைப் பற்றி வெளியான குறிப்பிற்குத் தன்னைப் பற்றி வெளியிட அழகான படம் கிடைக்கவில்லையா?' என்று கோபித்துக் கொண்டாரே ஏன்? சமீபத்தில் எதிர்க் கடைக்காரன் வம்பிழுக்கிறான் என்பதற்




காக 'நாலாயிரம் பக்கம் எழுதிய ஒரு தமிழ் எழுத்தாளனுக்கு இப்படி ஒரு வேதனையா?' என்று குங்குமத்தில் குமுறியிருந்தாரே, ஏன்? இவைகளையெல்லாம் இவர் ஏன் 'ஸ்போர்ட்டிவ்'வாக எடுத்துக் கொள்ளவில்லை?

சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் கேள்விகளைக் கேட்பது வாசகனுக்கு நல்லதல்ல. அப்படிச் சம்பந்தமில்லாத கேள்விகளுக்குப் பதிலளித்துக் கொண்டிருப்பது எழுத்தாளனுக்கும் நல்லதல்ல. இதே போக்கில் போனால் 'இலக்கிய வட்டமாக' இருக்காது. பொழுது போக்கற்றவர்களின் வீண் திண்ணைப் பேச்சாகத்தான் இருக்கும்!

பெங்களூர்-5 — அ. குமார்

● கல்கி 22–5–83 இதழில் கே. ராஜகோபாலன் எழுதிய துணுக்கைப் (பக்கம்-59) படித்துவிட்டு 27–5–83 இரவு 10–40 முதல் 11–40 முடிய மொட்டை மாடியில் குடும்பத்தினர் புடைசூழ அமர்ந்திருந்ததுதான் மிச்சம். குருவைச் சந்திரன் மறைக்கவேயில்லை.

பழமார்நேரி — பி. சுந்தரராமன்

● கல்கி ஆசிரியர் கடிதமும், பழமார்நேரி திரு சுந்தரராமன் கடிதமும் கிடைத்தன.

தவறு நேர்ந்தமைக்கு மன்னிப்புக் கோருகிறேன்.

கடந்த 27ந் தேதியன்றும் சந்திரன் வியாழனை மறைத்தது என்னவோ உண்மை. ஆனால் இந்த முறை அதிகாலையில் நடந்து விட்டது. எனது கணக்கில் சிறு தவறு நேர்ந்து விட்டது. 27ந் தேதி இரவு வானில் பார்க்கலாம் என்று எழுதிவிட்டேன். நேரத்தைக் குறிப்பிடவில்லை நான்.

நடந்த நிகழ்ச்சியை உறுதி செய்து இந்தியன் எக்ஸ்பிரஸ் அபூர்வ காட்சி என்று 28ம் தேதி செய்தி வெளியிட்டிருந்தது.

சென்னை-92 — கே. ராஜகோபாலன்

● நேர்மையான அரசியல்வாதிக்கு உன் அட்டை. எடுப்பான பெண் படத்திற்கு முன் அட்டையாக்கும்? ஏ கல்கி?

மதுரை — நாகுவேலன்

● அடக்கமுடையவர்கள் விளம்பரத்தை அதிகம் விரும்ப மாட்டார்கள் என்பதற்கு

## திண்ணைப்பேச்சா?

எடுத்துக்காட்டாகக் கலகபுரா வீரர், கர்நாடக முதல்வரின் படத்தை 'கல்கி'யின் உட்பக்க அட்டையில் போட்டு விட்டீர்களாக்கும்?

ஸ்ரீரங்கம் — ஆர். கோபாலன்

● ''க்விஸ்'' பகுதியில் (கல்கி ஜூன் 5) இந்திய டெஸ்ட் குழுவில் இடம்பெற்ற முதல் தமிழர் எம். ஜே. கோபாலன் என்றும் அவருடைய மற்ற சிறப்பு அவர் இரண்டு விளையாட்டுக்களில் அகில உலக அளவில் இடம்பெற்ற ஒரே ஆட்டக்காரர் என்றும் சொல்லியிருக்கிறீர்கள். தமிழ் நாட்டைச் சேர்ந்த மற்றொருவரும் இரண்டு விளையாட்டுக்களில் இந்தியன் டீம்களில் ஆடியிருக்கிறார். அவர் ஸி. ராமஸ்வாமி. டென்னிஸ், கிரிக்கெட் இரண்டிலும் ஆடினார். வேறு எந்த மாநிலத்திலும் இரண்டு டபுள் இன்டர் நேஷனல்ஸ் கிடையாது.

சென்னை-5 — கே. எஸ். நரசிம்மன்

# வட்டமேஜை

# நியூட்ரமுல் சக்தி.

## சேம்பியன்கள் தேர்ந்தெடுக்கும் சக்தி.

நியூட்ரமுல். அமுல் பால்வளம். அருமையான மால்ட்.
ஆரோக்கிய வைட்டமின்கள். ஆர்வமிகு புரதம்.
ஆதார உலோகதாதுக்கள். சப்புக் கொட்டிட சாக்கலேட்...
இவ்வளவுக்கும் விலை மலிவு—போர்ன்விடா, பூஸ்ட்,
மால்டோவா எதனையும் விட. மறவாதீர்கள் ஐஎஸ்ஐ தர
முத்திரை தாங்கியது நியூட்ரமுல் ஒன்றுதான்.
விளங்குவீர் நியூட்ரமுல் 'வஸ்தாத்'தாக.




உயரம், வலிமை, உடல்திடம்--
பெருக்குவது எப்படி ?

பார்த்தறியாச் சலுகை: பலம்பெருக்கப் புத்தகம்!

NUTRAMUL P.O. BOX 10148, BOMBAY 400 001. kk

பெயர் ____________________

முகவரி ____________________

குஜராத் கோ-ஆபரேட்டிவ் மில்க்
மார்க்கெட்டிங் ஃபெட. லிட்.,
ஆனந்த்-388 001.

daCunha/GCM/76/TM/82

# ஒவ்வொரு பாடகரும் குரு; ஒவ்வொரு கச்சேரியும் வகுப்பு!

ஐந்து வயதாய் இருக்கும்பொழுது ஒரு சிறுமி தன் பெற்றோருடன் படகில் பயணம் செய்து; சிருங்கேரி சங்கராச்சாரியார் அவர்களைத் தரிசனம் செய்தாள். சிருங்கேரி சாரதா பீடத்தில் விழுந்து சேவித்தாள். சுவாமிகள் இரண்டு ஆரஞ்சுப் பழங்களை அந்தச் சிறுமியிடம் கொடுத்து அவள் பெற்றோரிடம், ''இவள் ஒரு நாள் புகழ் பெற்று விளங்குவாள்!'' என்று சொல்லி ஆசீர்வதித்தார்.

சிறுமி உண்மையிலேயே அதற்குத் தகுதியும் திறமையும் அடைந்து, பரிசுகளும் பாராட்டுக்களும் பெற்று, தாம் ஒரு முதல் தர வயலின் வித்துவான் என்றும், சிறந்த பாடகி என்றும் இன்று நிரூபித்து வருகிறார்—ஸ்ரீமதி டி. ருக்மணி.

சென்னை கஸ்தூரிபாய் நகரில், அமைதியான சூழ்நிலையில் வசித்து வரும் ருக்மிணி தன் இளமைக் காலங்களை விவரித்தார். ''என் தகப்பனாருக்குப் பூர்வீகம் தஞ்சாவூர்; தாயார் சென்னை; ஷிமோகாவில் பிறந்தேன். அப்பா கர்நாடகத்தில் வேலையாக இருந்ததால் படிப்பு பூராவும் பெங்களூரிலேயே கழிந்தது.

''தகப்பனாருக்கு இசையில் அபார ஞானம் உண்டு. அம்மாவுக்கும் சிரத்தைதான். ஏழெட்டு வயதிலேயே ஆர். ஆர். கேசவமூர்த்தி — பிடாரம் கிருஷ்ணப்பாவின் சீடர் என்பவரிடம் எனக்கு வயலின் சொல்லித் தர ஏற்பாடு செய்தார். பத்தாவது வயதில் இசைப் போட்டியில் வெள்ளிச் சந்தனபேலா பெற்றேன். பிறகு டெல்லியில் இன்டர் யூனிவர்சிடி யூத் இசை நிகழ்ச்சியில் வயலினில் முதல் பரிசு வாங்கினேன்'' என்கிறார் பன்னிரண்டு வயதிலேயே முதல் கச்சேரி செய்த ருக்மிணி.

யார் யாருக்கெல்லாம் பக்க வாத்தியம் வாசித்துள்ளார்?

''15 வயதிலேயே மாலிக்கு வாசித்தேன். மாலி அப்போது அபாரத் திறமையின் உச்சத்தில் இருந்தார். பெங்களூரில் நடைபெற்ற அக்கச்சேரி நன்றாக அமைந்தது. அது ஒரு தன்னம்பிக்கையை எனக்கு உண்டு பண்ணிற்று. பிறகு, பட்டப் படிப்பு முடிந்த பின்னர் முழுக்க முழுக்கச் சங்கீதத்தில் ஈடுபட்டேன். அம்மாவுக்கு என் முன்னேற்றத்தில் நல்ல ஆர்வம். சாதகம் செய்யாவிட்டால் விடவே மாட்டார். என் மூத்த தமையனைப் பற்றியும் குறிப்பிட்டாக வேண்டும். என்னைச் சிறந்த வித்வான்களுக்கு அறிமுகப்படுத்தி ஊக்கம் அளித்தார்.''

''அந்தக் காலத்து வித்வான்களிலிருந்து இன்று முன்னணியில் இருக்கும் சேஷகோபாலன் வரை எல்லோருக்கும் வாசித்து நல்ல பெயர் எடுத்திருக்கிறார்.'' என்கிறார் கணவர் ஸ்ரீனிவாசன். (டி. வி. எஸ். நிறுவனம் ஒன்றில் பணி புரியும் இவருக்கு இசையில் ரொம்ப ஈடுபாடு)

''என்னைப் பொறுத்தவரை ஒவ்வொரு பாடகரும் எனக்குக் குரு போலத்தான்; அவர்களிடமிருந்து நிறையக் கற்றுக்கொண்டிருக்கிறேன். அது போலவே ஒவ்வொரு கச்சேரியும் எனக்குப் புதுப் புது வகுப்பு மாதிரி. இன்றைக்கு என்ன கற்றுக்கொண்டோம் என்று யோசிப்பேன். குறைகள், தவறுகள் இவற்றை உணர்ந்து ஏன் இந்த ஸ்வரமோ, ராகமோ எடுபடவில்லை என்று அலசிப் பார்த்து அடுத்த கச்சேரியில் இந்தத் தவறு நேராமல் கவனித்துக் கொள்ளுவேன்''.

1966-67ல் சென்னை வந்தார். செம்மங்குடியிடம் முறையாகக் கற்றார். அப்போதே லால்குடியிடம் வயலினில் மேலும் சில நுணுக்கங்களைக் கற்றுக் கொண்டாராம். ''இதெல்லாம் ஒரு பாக்கியம்.''

நிறையக் கச்சேரிகள் செய்துள்ளாரே — குறிப்பிடத் தக்க சம்பவம் ஏதாவது உண்டா?

''ஒரு சமயம் ரேடியோ சங்கீத சம்மேளனக் கச்சேரி நடந்தது. இரவு 11 மணிக்குக் கச்சேரி முடிந்த உடனேயே, ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள்போனில் பாராட்டுத் தெரிவித்தார். அப்போது எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியை விவரிக்க வார்த்தைகளே இல்லை.

''ஜி. என். பி. இயற்றிய கிருதிகளைஒரு முறை ரேடியோவில் பாடினேன். அவர் நிகழ்ச்சியைக் கவனமாகக் கேட்டுவிட்டுப் பலமுட

''என்னடா கோபு, சாப்பாட்டில் இவ்வளவு நீளத் தலைமுடி கிடக்கு!''

''இப்போதாவது என் மனைவிதான் சமைக்கிறாள் என்பதை ஒத்துக்கிறியா?''

—கோவை அ. கதிர்வேல்



மும், நான் மிக நன்ருகப் பாடியதாக மகிழ்ச்சியுடன் தெரிவித்தார். அதே மாதிரி திருவனந்தபுரத்தில் ஸ்வாதித் திருநாள் மியூசிக் அகாடமியில் என் கச்சேரி முடிந்ததும், சுவையான பிரசங்கமே செய்து பாராட்டிஞர் செம்மங்குடி அவர்கள். டி. கே. ஜெயராமன், பட்டம்மாள் இவர்கள் எல்லோரும் வெவ்வேறு சமயங்களில் பாராட்டியபோது எவ்வளவு அவார்டுகள் வாங்கினுலும் இப்பாராட்டுகளுக்கு ஈடாகாது. என்று நினைத்துக்கொள்வேன்.'' (''வாசித்தது போதாது: இன்னும் வாசி'' என்று உற்சாகப்படுத்துவாராம் செம்பை)

இத்தனை பாராட்டுப் பெற்றும் பெண் வயலினிஸ்ட் ஆயிற்றே, வேண்டாமே என்று சொல்லும்படியான சந்தர்ப்பம் நேர்ந்திருக்கிறது!

பெங்களூரில் ஏற்பாடான கச்சேரி ஒன்றில் பெண் பக்க வாத்தியம் வேண்டாம் என்று ஒரு வித்வான் மறுத்திருக்கிருர். சபாக்காரர்கள் ஒத்துக்கொள்ளவில்லை. எல்லாவரையும் ஏற்பாடு செய்தாகி விட்டது என்று சொல்லி, வேறு பாடகரை ஏற்பாடு பண்ணினுர்களாம்!

''அதுமாதிரி நேர்வது ரொம்ப அபூர்வம்.'' என்ருர் ருக்மிணி. இருந்தாலும் நமக்குக் கோபம்தான் வருகிறது.

ஸ்ரீமதி ருக்மிணி நாலு வருடம் முன்னுல் வெளி நாடு சென்றிருக்கிருர். சான்பிரான்ஸிஸ்கோ, நியூயார்க் போன்ற இடங்களில் ஸோலோ வயலின் தவிர, கல்யாணராமனுக்குப் பக்க வாத்தியம் வாசித்தார்.

''பிரெஞ்சு ரசிகர்கள் சரியாகத் தாளம் போட்டுக் கொண்டு ஆர்வத்துடன் ரசிப்பார்கள். மங்களம் பாடிய பிறகும் கூட மறுபடியும் பாடச் சொல்லிக் கேட்பார்கள். ஐந்து நிமிஷம் பத்து நிமிஷம் ஒவ்வொரு பாட்டுக்கும் கரகோஷம் நீடிக்கும். அப்போது அங்கே வைஜயந்தி மாலாவின் நாட்டியம் ஒரு நாள் நடைபெற்றது. அவருக்குப் டதும் பாடினேன்.''

கர்நாடக இசை மேலும் நன்கு வளர ஆர்வம் இன்னும் தழைக்க ஏதாவது யோசனை?

''அகாடமி ஸீஸனில், இரவுக்கச்சேரி நீங்கலாக மற்ற கச்சேரிகள் எல்லாம் இலவசமாக விட்டுவிட வேண்டும். அப்படியாளுல் நிறைய ரசிகர்கள் வந்து கேட்பார்கள். நிச்சயம் ரசிகர்களுக்குச் சங்கீதத்தில் சிரத்தை அதிகரிக்கும்'' என்று தெரிவித்தார் கணவர் ஸ்ரீநிவாசன்.

ருக்மிணியின் கருத்து மாறுபட்டிருந்தது. 'இது வேறு சிக்கலைத் தோற்றுவிக்கும். இரவு நேரக் கச்சேரிகளுக்குப் போட்டி அதிகமாகும்' என்பது அவர் கருத்து.

''சங்கீதவித்வான்களுக்குப்பயணச்சலுகை தந்தாலும், அச்சலுகையைப் பெறுவதற்குள் போதும் போதுமென்ருகி விடுகிறது. பல கடிதங்கள், சான்றிதழ்கள் வாங்க வேண்டியிருக்கிறது'' என்று குறிப்பிட்ட ருக்மிணி, ''இதை இன்னும் பலர் பயன் அடையும்படி எளிமைப்படுத்தலாம்'' என்ருர்.

காலை ஐந்தரை மணிக்கு எழுந்திருந்தால் கணவருக்குக் காப்பி டிபன் கொடுத்து அனுப்பிய பிறகே ருக்மிணியின் சாதகம் ஆரம்பமாகிறது. சென்னையில் இருக்கிற நாட்களில் மாலையிலும் சாதகம் செய்கிருர். டி. வி. அதிகம் பார்ப்பதில்லை. சினிமா பார்ப்பதில் விருப்பம் இருந்தாலும் நேரம் கிடைப்பதில்லை.

இரண்டு பையன்கள். மூத்தவன் டாக்டருக்குப் படிக்கிருன். சங்கீத ஞானம் நிரம்பப் பெற்ற இரண்டாமவன் ஹைஸ்கூலில் வாசிக்கிருன்.

சீடர்களையும் தயாரித்து வைத்திருக்கிருர். குறிப்பிடத் தக்கவர்கள்: தாரா, கங்காதரன், ரத்னு.

பேட்டி: சாருகேசி; தமயந்தி
வண்ணப்படம்: சுபா

# இரண்டு உண்மைகள் !



டெலிபோன் டைரக்டரியில் தன்னுடைய பெயர் கடைசியில் வரவேண்டும் என்பதற்காக, சிகாகோவில் உள்ள ஒருவர் தன் பெயரை Zeke Zzzypt என்று மாற்றிக் கொண்டிருக்கிருர்!

இந்திய இதிகாசமான மகாபாரதத்தில் மூன்று மில்லியன் வார்த்தைகள் உள்ளன. உலகத்திலேயே இவ்வளவு வார்த்தைகள் கொண்ட புத்தகம்வேறு எதுவும் கிடையாது!

ஆதாரம்: ஆயிரம் உண்மைகள்
—ராகுல்



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani Editor: K. Rajendran

